KALKI
20.5.2001
ரூ. 5.00

# கல்கி





## தேர்தல் முடிவுகள்

–தலையங்கம்

## எப்போ கல்யாணம்?

– சிம்ரன் பேட்டி

# Now Air-India at your fingertips!

Introducing www.airindia.com

Flight information? Reservations? Meal requests? Seat preferences? Just click on our site at www.airindia.com. And we'll take care of everything. Sounds convenient? That's cyber travel for you - a reality of the 21st century!



एअर·इंडिया
AIR-INDIA

HTA.2086.2000



# அரங்கேறியது வன்முறை!

தமிழ்ச் சினிமாவில் வரும் வன்முறைக் காட்சி போல், மீண்டும், மீண்டும் அந்தச் சம்பவம் நெஞ்சில் நிழலாடுகிறது. மனம் பதைபதைக்கிறது.

வோட்டுப் பதிவன்று வழக்கம் போல ரவுண்ட்ஸில் இருந்தபோது, எழும்பூர் தொகுதி மிகவும் பதற்றமாக இருக்கிறது என்று தகவல் வந்தது. தி.மு.க சார்பாக துணை சபாநாயகர் பரிதியும், அ.இ.அ.தி.மு.க

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

கூட்டணி சார்பாக தமிழக முன்னேற்றக் கழகத் தலைவர் ஜான் பாண்டியனும் போட்டியிட்ட தொகுதி. ஜான்பாண்டியன் இரட்டை இலை சின்னத்தில். பம்பரமாகச் சுற்றி அவருக்குத் தேர்தல் வேலை பார்த்தார்கள்.

பரிதியின் தேர்தல் அலுவலகம் அமைந்திருப்பது டவுட்டன் அருகிலுள்ள மூக்காத்தாள் தெருவில். அந்தத் தெருவுக்குள் நுழையும் முன் ஒரு டொயோட்டா, இரண்டு சுமோ மற்றும் ஒரு அம்பாஸிடர் கார்களில் 'உய்' என்ற சைரன் சப்தத்துடன் ஒரு வாகன அணி வகுப்பு. வேட்பாளர் ஜான் பாண்டியன்! அவர் பரிதியின் அலுவலகத்தைக் கடந்த பிறகு தொடரலாம் என்று நின்றுவிட்டோம். அந்த வாகன அணிவகுப்பு 'க்ரீச்' என்று பிரேக் அடித்து நிறுத்தப் பட்டது. கண்ணிமைக்கும் நேரத்தில் சுமோவிலிருந்து கைகளில் உருட்டுக் கட்டைகள், நீண்ட அரிவாள்களுடன் ஆட்கள் இறங்கினர். அதற்கப்புறம் 'ஐயோ... அம்மா' என்று தேர்தல் அலுவலகத்திலிருந்து உயிருக்குப் பயந்து ஓடும் தி.மு.கவினரின் பரிதாபக் குரல்கள். என்ன நடக்கிறதென்று தெரியாமல் தெருவில் வந்த ஸ்கூட்டர்காரர் தாக்கப்பட்டு வண்டி கவிழ்க்கப்பட்டது. அலுவலகத்தின் வாசலில் நிறுத்தப்பட்டிருந்த பரிதியின் டாடா சுமோ உட்பட பதினைந்து கார்கள், உருட்டுக் கட்டைகளால் தாக்கப்பட்டு நசுக்கப்பட்டன. கடைகளின் ஷட்டர்கள் சடசடவென இறக்கப்பட்டு மக்கள் காணாமல் போனார்கள்.

அலுவலகத்தின் பக்கத்தில் நாஞ்சில் மனோகரனின் வீடு. அவரது மகள் தெருவில் நடப்பது என்ன என்று தெரியாமல் காரை எடுக்க, அந்தக் காரும் தாக்கப் பட்டது. அவர் உயிருக்குப் பயந்து உள்ளே ஓடினார். ஜான்பாண்டியன் தலைமையில் நடத்தப்பட்ட இந்த வெறியாட்டம் பத்து நிமிடம் நீடித்தது. அவரது பாதுகாப்புக்காக கான்வாயில் வந்த போலீஸ்காரர்கள் வன்முறை வெறியாட்டத்தை வேடிக்கை பார்த்தார்களே தவிர, தி.மு.கவினர் எவ்வளவோ கெஞ்சியும் ஜீப்பை விட்டு இறங்கவில்லை. திருப்தி ஏற்படும் அளவிற்குத் தாக்குதல் நடத்திவிட்டு வாகனங்களில் ஏறி விரைந்தார்கள் ஜான் பாண்டியன் ஆட்கள். ஏனோ நம் மனத்தில் 91-96ல் நடந்த அராஜகச் சம்பவங்கள் நிழலாடின.



• பரிதி இளம்வழுதி

அவர்கள் சென்ற பிறகு அந்தத் தெரு ஒரு போர்க்கள காட்சியை நினைவு படுத்தியது. மிரண்டு போன முகத்துடன் எங்கிருந்தோ தமது தொண்டர்களுடன் அலுவலகத்திற்கு வந்து சேர்ந்த பரிதியைச் சந்தித்தோம். அதிர்ச்சியிலிருந்த மீளாத நிலையில் பேசினார்.

"இந்தத் தொகுதியில் ஜான் பாண்டியன்தான் அ.இ.அ.தி.மு.க அணி வேட்பாளர் என்று அறிவிக்கப்பட்ட தினத்திலிருந்தே 'போலீஸ்

அதிகாரிகளிடம் அவர் ரவுடித்தனம் செய்வார்; நெல்லையிலிருந்து ஆட்களை சென்னைக்கு அழைத்து வந்து தேர்தல் தினத்தன்று கலவரம் செய்வார்' என்றெல்லாம் எச்சரித்து வந்தேன். அவர்கள் ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. அதேபோல இன்று (வோட்டுப் பதிவு) வாக்குச்சாவடிக்குள் தனது அடியாட்களுடன் பந்தாவாகச் சென்று ஆங்காங்கே பதற்றத்தை ஏற்படுத்தி வந்தார். அதிகாரிகளை 'கை கால் எடுத்து விடுவேன்' என்று மிரட்டினார். 'தி.மு.க ஜெயித்து விடும்' என்று தெரிந்தவுடன் உச்ச கட்டமாக என்னைக் கொலை செய்யவும் துணிந்துவிட்டார். அதிர்ஷ்டவசமாக அவர்கள் தாக்குதலைத் துவங்கியதும் மாடிப்பகுதிக்குச் சென்று அடுத்த வீட்டிற்குத் தாவி விட்டேன்'' என்றார் பரிதி.



## கல்லா சிரிப்பு

''பணம் இருக்கா, இல்லையாப்பா... ஒவ்வொரு பாக்கெட்டா தேடிப் பார்த்துக்கிட்டிருக்கியே...?''

''இந்த ஐந்து நிமிஷத்துக்கே உங்களுக்குப் பொறுக்கலையே... டிபன் கொண்டு வர உங்க சர்வர் அரை மணி நேரம் தாமதிச்சப்போ, எனக்கு எப்படி இருந்திருக்கும்?

— சீர்காழி வி. ரேவதி

பரிதியைத் தாக்க நடந்த முயற்சியைக் கேள்விப்பட்ட முதல்வர், கமிஷனரை உடனே ஸ்பாட்டுக்குப் போகச் சொன்னாராம். அவர் கொஞ்சம் சுணங்கவே 'நீங்க போறீங்களா... இல்ல, நான் அங்கே போகட்டுமா?' என்று கேட்டவுடன்தான் போலீஸ் விரைந்து நடவடிக்கை எடுத்து, ஜான் பாண்டியனின் ஆட்களையும் அவரையும் கைது செய்திருக்கிறது.

''தேர்தல் அலுவலகத்தைத் தாக்கிய ஜான்பாண்டியன் ஆட்கள் அதே வேகத்தில் நான்கைந்து வாக்குச் சாவடிகளுக்குச் சென்று வோட்டுப் போட வரிசையில் நின்று கொண்டிருந்த மக்களைப் பயமுறுத்தி கலைந்து போக வைத்து விட்டார்கள்'' என்றார் அந்தப் பகுதி தி.மு.க பிரமுகர் ஒருவர். தமது ஆதரவாளர் ஒருவரை தி.மு.கவினர் கடத்திச் சென்று விட்டதாகவும் இரண்டு பேரை வெட்டி விட்டதாகவும் புகார் கொடுத்திருக்கிறார் ஜான் பாண்டியன்.

தெற்குப் பகுதியில் ஜான் பாண்டியனுக்குச் சீட்டு கொடுத்தால் முக்குலத்தோர்களின் ஆதரவை இழக்க வேண்டி வரும் என்று சென்னை தொகுதியை ஜான் பாண்டியனுக்குக் கொடுத்தார் ஜெயலலிதா. இதன் மூலம் ஜாதி மோதல்களில் அனுபவப்பட்டுப் போன வன்முறைக் கலாசாரத்துக்கு சென்னையில் அடித்தளம் போடப்பட்டிருக்கிறது. இதற்கு அதிகார வர்க்கத்தின் ஆதரவும் கிடைக்கும் பட்சத்தில் நிகழக் கூடிய விளைவுகளை நினைத்தால் தலை சுற்றுகிறது.

— நமது நிருபர்



கத்தியின்றி, ரத்தமின்றி மனித நேயத்தை மட்டுமே முன்னிறுத்தி ஹாலிவுட்காரர்களால் படமெடுக்க முடியுமா? 'முடியும்' என்று அரை நூற்றாண்டு காலமாக நிருபித்து வந்திருக்கிறது வால்ட் டிஸ்னி நிறுவனம். லேட்டஸ்ட் நிரூபணம் '102 டால்மேஷன்ஸ்' திரைப்படம்.

டால்மேஷன் நாய்களை ஹீரோக்களாக வைத்து, இன்று நேற்றல்ல 1961-ல் தொடங்கி பல அனிமேஷன் படங்களை எடுத்து பணத்தைக் குவித்த இவர்கள், கடைசியாக 1996-ல் கொடுத்த '101 டால்மேஷன்ஸ்' படத்தை, ஹாலிவுட் வாசனையை அதிகம் அனுமதிக்காத க்யூபாவில் கூட க்யூவில் நின்று பார்த்தார்கள். இந்தப் படத்தின் இரண்டாவது பாகம்தான் '102 டால்மேஷன்ஸ்.'

தோல் ஆடைகள் மீது குரூர பைத்தியமாக இருக்கும் கோடீஸ்வரி குருயல்லா (பெயர் ரொம்பப் பொருத்தம்!) 101 டால்மேஷன் நாய்க்குட்டிகளைச் சிறை பிடித்து வந்து அவற்றின் தோலை உரிக்கக் கத்தியைத் தீட்டும் நேரத்தில் புத்திசாலி நாய்கள் வில்லிக்கு அல்வா கொடுத்துத் தப்பித்து விடுகின்றன. குருயல்லாவுக்கு ஐந்து வருடம் ஜெயில். இது முதல் பாகம்.

சிறையிலிருந்து வெளியே வரும் குருயல்லா, தோல் ஆடைகளை வெறுத்து, நாய்களை நேசிக்கும் நல்ல மனுஷியாகப் புதிய அவதாரம் எடுப்பதாகத் தொடங்குகிறது இரண்டாவது பாகம். 'கடவுளே! குருயல்லாவாவது, மனம் மாறுவதாவது' என்று வாண்டுகள் தொடங்கி, பெரிசுகள் வரை தியேட்டருக்குள்ளிருக்கும் எல்லோர் முகத்திலும் திக்... திக்.. சந்தேகம். இந்த முறை வில்லியின் விவகாரங்களைக் கூர்மையாக நோட்டம் விடுகிறாள் மிருகவதை தடுப்புச் சங்கம் நடத்தும் கதாநாயகி சோனி.

இன்னொரு பக்கம், அனாதையாக விடப்பட்ட சில தெரு நாய்கள், ஒரு பூனை, ஒரு கிளி சகிதம் காப்பகம் நடத்தும் கதாநாயகன் கெம்முக்கு (கெம் சாப்பாட்டு மணி அடித்ததும், நாய்கள் தங்களின் தட்டுகளைச் சரியாக அடையாளம் கண்டு, வாயில் கவ்விப் போய் வரிசையில் நின்று, உணவு வாங்கிச் சாப்பிடுவது அசத்தல் அழகு) பராமரிப்புச் செலவு, இடம் என்று ஏகப்பட்ட தலைவலிகள்.

கெம்முக்குப் பண உதவி செய்து, குருயல்லா புதிய காப்பகம் அமைத்துக் கொடுக்க, 'அவளது மனமாற்றம், சுத்த ஹம்பக்; நம்பாதே' என்று எச்சரிக்கிறாள் சோனி. சோனி ஆசை ஆசையாய் வளர்க்கும் ஒரு ஜோடி டால்மேஷன்களில் பெண் நாய் அழகான நான்கு குட்டிகளை ஈன்றெடுக்க, மகிழ்ந்து போகிறாள். ஆனால் சோனியின் அலுவலகத்திற்கு வரும் குரு

# ஒரு ஹாலிவுட் அசத்தல்!

யல்லா எதிர்பாராத விதமாக, இந்த நாய்க் குட்டிகளைப் பார்த்துவிட, அடுத்த கணம் மறந்து போயிருந்த டால்மேஷன் ஜுரம் அவளை 'பக்'கென்று பற்றிக் கொள்கிறது. நியூயார்க் நகர வீதியில் போகும் வாகனங்கள், மனிதர்கள், கட்டடங்கள் என்று எல்லா வஸ்த்துக்களும் டால்மேஷன் புள்ளிகளைப் போர்த்திக் கொண்டு இருப்பதுபோல் தெரிய, குருயல்லாவுக்கு டால்மேஷன் சின்ட்ரோம் தலைக்கேறுகிறது. பார்வையாளர்களின் சந்தேகம் நிஜமாகி, 'அய்யய்யோ! இனி என்ன நடக்குமோ' என்று பதறத் தொடங்கி விடுகிறார்கள். அதன்பிறகு, படம் முடிகிறவரை எல்லோரும் நாற்காலி நுனியில் தொற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

தமது உதவியாளர் டிசைனர் உதவியோடு 102 நாய்க்குட்டிகளைத் திருடத் தொடங்குகிறாள் வில்லி. திருட்டுப் பழி ஹீரோ கெம் தலையில் விழுகிறது. இறுதியில் நாய்கள் எப்படித் தப்பிக்கின்றன என்று ஏக அமர்க்களமாய்க் காட்டியிருக்கிறார்கள்.

திரைக்கதையும் க்ளைமாக்சும், தமிழ்ப் படத்தை நினைவுபடுத்தினாலும், முக்கியக் கதையின் ஊடாக மெல்லிய நூலிழை போல கெம் - சோனியின் காதல் மென்மை இழையோடுகிறது. படம் முழுக்க 345 இடங்களில் விஷுவல் எஃபெக்ட் கொடுத்திருக்கிறார்களாம். ஆனால் ஓர் இடத்திலாவது அது தெரிய வேண்டுமே.. டிஸ்னி படங்களுக்கே உரிய ஐஎஸ்ஓ. பர்ஃபெக்ஷன்.

நாயகன், நாயகி இருவருமே டிஸ்கோவுக்குக் கிளம்பிவிட, இருவரது நாய்க்குடும்பங்களும், டெக்கில் கேசட்டைப் போட்டு, ரிமோட்டை இயக்கி, வீடியோவில் படம் பார்த்து ரசிப்பதை ரசிக்க, கூடுதல் கண்கள் வேண்டும்.

நாயகி சோனியின் டால்மேஷன்கள் கடத்தப்பட்டதும், அதை துப்பறியக் கிளம்பும் கெம்மின் நாய்கள், கடத்தப்பட்ட வழியில் எதிர்ப்படும் ஏரியா நாய்களிடம், நாய் மொழியில் பேசி வழியைத் தெரிந்து கொள்வது 'அட்டே!'

உடம்பில் கரும்புள்ளி இல்லாமல் வெள்ளை நிறமாகப் பிறந்துவிடும் அந்த டால்மேஷன் பப்பி, ஜெராக்ஸ் மெஷினில் சிந்திக்கிடக்கும் கருப்பு மையில் புரண்டு, உடம்பில் புள்ளிகளை ஏற்படுத்திக் கொள்ள முயற்சிக்கும்போது, ஒரு கேரக்டராகவே மாறி எல்லோரையும் வசீகரித்து விடுகிறது. இத்தனைக்கும் அது கம்ப்யூட்டரில் உருவாக்கப்பட்ட 3டி அனிமேஷன் பப்பி என்றால் நம்பித்தான் ஆக வேண்டும்.

பாரிசுக்குக் கடத்தப்படும் நாய்களைக் காப்பாற்ற இந்தப் பப்பியும், 3டி லிஸ்பிங்கில் கொச்சையாய் ஆங்கிலம் பேசும் அந்தக் கிளியும், எக்ஸ்பிரஸ் ரயிலில் பாய்ந்து ஏறி செய்யும் சாகசங்கள் வயிற்றைப் புண்ணாக்கி விடுகின்றன. வில்லியாகவே மாறி குருயல்லா பாத்திரத்தை ஏற்றிருக்கும் நடிகை ஜெலன் குளோஸ், க்ளைமாக்ஸ் காட்சியில் கேக் தொழிற்சாலையில் மாட்டிக் கொண்டு படும் அவஸ்தைகள் ஆனந்தம்.

டால்மேஷன்ஸ் 103, 104 என்று வரிசையாக எடுத்துக் கொண்டிருந்தால்கூட சளைக்காமல் பார்க்கலாம். இப்போதைக்கு மொழி கூடத் தேவைப்படாத இந்த ஹாலிவுட் அசத்தலைக் குடும்பத்தோடு பாருங்கள்.

**- ஆர்.சி. ஜெயந்தன்**

● டிஸ்டிங்ஷன்





திருச்சி, இ.ஆர். மேனிலைப் பள்ளியின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு பிரமிக்கத் தக்க வகையில் அஞ்சல் தலைகள், நாணயங்கள் கண்காட்சி பள்ளி வளாகத்தில் மூன்று நாட்கள் நடைபெற்றது. இதை நடத்தியவர் திருச்சி கே.பி.எஸ். நாராயணன் என்பவர்.

ஒரு முழு நீள வெள்ளை க்ராஃப் தாளில் ஒட்டப்பட்டிருந்த ஒவ்வொரு அஞ்சல் தலைக்கும் எதிரில், அதைப் பற்றிய விவரங்கள் ஒரு பாலீதீன் உறைக்குள் வைத்து, வாசித்துக் கொள்ளும் வகையில் இணைக்கப் பட்டிருந்தன. இந்தியாவில் ஆதிக்கம் செலுத்திய ஆங்கிலேயர்கள், சுதந்திரப் போராட்ட வீரர்கள், விஞ்ஞானிகள், பல்துறை அறிஞர்கள், சமூகச் சிந்தனையாளர்கள், எழுத்தாளர்கள் மற்றும் சிறப்பு அஞ்சல் தலைகளுக்கு உரியவர்களின் குறிப்புகள் அனைத்தும் ஆண்டு வாரியாக வாசித்து முடித்துவிட்டுத் திரும்பியபோது சுமார் இருநூற்றைம்பது ஆண்டு கால வரலாற்றுப் பதிவுகள் மனசுக்குள் மீண்டும் ஒருமுறை பதிந்துவிட்ட உணர்வு. பெரும்பாலான தேசங்களின் அஞ்சல் தலைகளும், உறைகளும் கண்காட்சியில் இடம் பெற்றிருந்தன.

அஞ்சல் தலைகளைப் போலவே ஒவ்வொருவர் காலத்திய நாணயங்கள் அவற்றிற்குரிய குறிப்புகள் எழுதப்பட்டு ஆண்டு வாரியாக அணி வகுத்திருந்தது அசத்தல்.

# ஏலத்தில் எடுத்த நாணயங்கள்!

கி.மு. 120 ஆம் ஆண்டுகளில் புழக்கத்தில் இருந்த இந்தோ - கிரேக்க நாணயங்களிலிருந்து சமீபமாய் வெளிவந்துள்ள இந்திய நாணயங்கள் வரைக்கும் நாணயக் கண்காட்சியில் இடம் பிடித்துள்ளன.

இவ்வளவு 'கலெக்ஷனை' இவரால் எப்படி சேமிக்க முடிந்தது? நாராயணனைக் கேட்டோம் :

- "அஞ்சல்தலைகள் சேமிக்கும் பழக்கம் பத்து வயதில் ஏற்பட்டது. கிட்டத்தட்ட அறுபத்தைந்து ஆண்டுகளாக இவற்றைச் சேமித்து வருகிறேன். திருச்சி ஜோசப் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது வெளிநாடுகளிலிருந்து பாதிரியார்கள் வந்து போவார்கள். அவர்கள் மூலமாக வெளிநாட்டு அஞ்சல் தலைகளைச் சேமிக்கத் துவங்கினேன்.

ஒருமுறை பெற்றோருடன் திருப்பதிக்குச் சென்றபோதுதான் நாணயங்களையும் சேமித்து வைத்தால் என்னவென்று தோன்றியது. அப்பொழுதெல்லாம், திருப்பதி கோயில் உண்டியலில் போடப்படும் நாணயங்களை தேவஸ்தானத்தில் ஏலம் விட்டுவிடுவார்கள். ஏலத்தில் எடுத்தவர்கள் மலையடிவாரத்தில் அந்த நாணயங்களை, கூறுகள் கட்டி பக்தர்களிடம் விற்பனை செய்வார்கள்.

அதில் நமது பழங்கால நாணயங்கள், வெளிநாட்டு நாணயங்கள் போன்றவற்றைப் பொறுக்கி எடுத்து அவர்களிடம் 'நல்ல விலை' தந்து விட்டு வாங்கி வருவேன்" என்கிறார் நாராயணன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



அப்பல்லோ மருத்துவமனையின் அவசர சிகிச்சைப் பிரிவு. சாலை விபத்தில் சிக்கியிருக்க வேண்டும். தலையிலிருந்து இரத்தம் கொட்டிக் கொண்டிருக்க, அந்த இளைஞனை ஸ்ட்ரெச்சரில் வைத்துத் தள்ளியபடி ஆபரேஷன் தியேட்டர் நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்கள்... கடவுளே...! தாரை தாரையாகக் கண்ணீர் வடித்தபடி பின் தொடர்ந்து ஓடும் அந்தப் பெண்மணி.. சிம்ரன்?

தியேட்டருக்குள் ஸ்ட்ரெச்சர் இழுத்துச் செல்லப்பட்டு, கதவுகள் மூடப்பட்டதும், சுவரில் ஆதரவாய்ச் சாய்ந்து கொண்டு வெடித்து அழும் அந்த முகத்தை நோக்கி நம் க்ளோசப் பார்வை நீள்கிறது.

சந்தேகமே வேண்டாம்... நம்ம சிம்ரன் தான்... படபடப்போடு நெருங்கிய நம்மை கட்டுப் படுத்தியது, "கட்... ஷாட் ஓகே!"என்ற குரல்.

'12பி' படத்தோட ஷூட்டிங் சார்.." கிரேன் ஆபரேட்டர் நம் காதைக் கடித்தார்.

சற்று முன்னால் கிளிசரின் இல்லாமல் அழுது கொண்டிருந்த சிம்ரன் கலகலவென சிரித்துக் கொண்டிருந்தார். கூடவே கண்களும். ஒப்பனை இல்லாத சிம்ரனின் யதார்த்தமான அழகைப் பற்றி ஓர் எண்சீர் விருத்தம் எழுத ஆசைதான். ஆனால் இந்த சந்தர்ப்பத்தைவிட்டால் பேட்டிக்கு வேறு வாய்ப்பு கிடைக்காது... விருத்த ஆசையை விடுத்து, கேள்விகளைத் தொடுத்தோம்.

**சமீப காலத்தில், ஐந்து வருடமாகத் தொடர்ந்து கதாநாயகியாக தாக்குப் பிடிக்கும் ஒரே நடிகை நீங்கதான்... இதுக்குக் காரணமான தொழில் முறை ரகசியம், க்ளாமர்தானே?**

கொஞ்சமாய் வெட்கப்பட்டு... நிதானமாய்ப் பேசத் தொடங்குகிறார்.

"நீங்க ஆரம்பக்கால சிம்ரனை மனசுல வைச்சுக்கிட்டுப் பேசுறீங்கன்னு நினைக்கிறேன். 'தேரே



மேரே சப்னே' ஹிந்தி படத்தில் அறிமுகமானப்போ எனக்கு நடிப்புல அதிக அனுபவம் கிடையாது. அந்த ஒரு படத்தோடு தமிழுக்கு வந்துட்டேன். அப்புறம் தொடர்ந்து மூன்று, நான்கு படங்கள் 'கிளாமர் டால்'னு பெயர் வாங்கிக் கொடுத்துடுச்சு... மும்பையிலிருந்து வந்தாலே நிறைய எதிர்பார்ப்பாங்கன்னு எல்லோரும் என் கிட்டே சொன்னாங்க... நல்லவேளையாக



'துள்ளாத மனமும் துள்ளும்', 'வாலி'ன்னு நடிப்புக்கு ஸ்கோப் இருக்கிற பாத்திரங்கள், அடுத்தடுத்து கிடைச்சதாலே... தப்பிச்சேன். இப்பல்லாம் கிளாமரா நடிச்சு, நாலு டான்ஸ் பண்ணிட்டு போற படங்கள் பண்றதில்லே... அதுக்கு சிம்ரன் தேவையில்லைன்னு... இண்டஸ்ட்ரிக்கே புரிஞ்சுடுச்சு. ஹீரோயினுக்கு முக்கியத்துவம் இருக்கிற ரோல்தான் எனக்குத் தர்றாங்க. நானும் ஆத்மதிருப்தியோடு, அதிக ஈடுபாடோடு நடிக்கிறேன். நடிப்புத் திறமையைக் காட்ட வாய்ப்பு கிடைச்ச பிறகும் சரியா பயன்படுத்திக்கலைன்னா கேவலம். அதைக் காட்டிலும் மளிகைக்கடை வைச்சுப் பிழைச்சுக்கலாம். ரசிகர்களைக் கஷ்டப்படுத்தக் கூடாது.

**"இந்த அட்வைஸ் உங்க தங்கைக்குப் பொருந்துமா?"**

"நிச்சயமா... மோனலுக்கு நான் அட்வைஸ் பண்ணலாம். ஆனால் உத்தரவு போட முடியாது இல்லியா... அறிமுகப் படத்தை விட, இப்போ 'பத்ரி'யில கொஞ்சம் தேறிட்டாங்கன்னு நினைக்கிறேன். அடுத்த படத்துல ''இவங்க... நம்ம மோனல் தானா?'ன்னு ரசிகர்கள் கேட்கணும்னு சொல்லியிருக்கேன்.

**'வாலி' படத்தில் ஒரு சின்ன ஃப்ளாஷ் பேக்கில் வந்த ஜோதிகா, உங்களுக்குப் போட்டியாக வருவாரென்று, நீங்கள் நினைத்துப் பார்க்கவில்லைதானே?"**

"இந்தப் போட்டி, நம்பர் ஒன் ஹீரோயின் இதிலெல்லாம் எனக்கு நம்பிக்கையில்லை. நடிப்புத் திறமையும், நல்ல குணசித்திரமும் ஒண்ணு சேர்ந்தா... நமக்கான இடம் நிரந்தரமா இருக்கும். அதை யாரும் தட்டிப் பறிக்க முடியாது. இதைத் தாண்டி ஒவ்வொருத்தருக்கும் ஒரு தனித்தன்மை இருக்கு. ஜோதிகாவுக்குன்னு தனி கவர்ச்சி, எனக்குன்னு தனி வசீகரம் இருக்கு. இதிலே ரேஸ் பத்தி பேசவே முடியாதே. பொதுவாவே நட்சத்திரங்களுக்கிடையே ஈகோ இருந்தா முன்னேற முடியாது. எனக்கு உப்புத் தண்ணின்னா அலர்ஜி... ஈகோவைக் கண்டாலும் அலர்ஜி... அதனாலதான் இந்தப் படத்துல ஜோதிகாகூட நடிக்கிறேன். ஜோதிகாகிட்டே கேட்டால் அவங்களும் இதைத்தான் சொல்லுவாங்க..." என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே.. ஷாட் முடிந்து அங்கே வந்த ஜோதிகா... 'ஹாய்'... சொன்னபடி சிம்ரனின் தோள்மீது கைபோட்டுச் சிரித்தார். இதுதான் தருணம் என்று நம் கேமராக்காரர் அந்தக் காட்சியை க்ளிக்கிப் புண்ணியம் சேர்த்துக் கொண்டார். ஜோதிகா அங்கிருந்து நகர்ந்ததும்.. நேர்காணல் நீடித்தது.

**பாலசந்தர் குரு, கமல்ஹாசன் மாணவர், இரண்டு பேருடைய படத்திலும் நடிக்கறீங்களே... எப்படியிருந்தது?**

பாலச்சந்தர் சார் ஒரு சகாப்தம். அவர் படத்தையெல்லாம் தேடித்தேடி வீடியோவில் போட்டுப் பார்த்தேன். அதுவும்

அவரது நூறாவது படத்தில் நடிக்க, எனக்கு வாய்ப்பு கிடைக்கும்னு நினைக்கவே இல்லை. காலை ஏழுமணி தொடங்கி இரவு பத்து மணி வரைக்கும் ஒரே மாதிரி எனர்ஜி யோடு உற்சாகமாக இருக்கார். இன்னொரு கம்பெனியில் நடித்து விட்டு அங்கே போனால் ஹார்லிக்ஸ் சாப்பிட்ட மாதிரி ஆயிடுது. அவர்கிட்டே புதுசா சேர்ந்த மாணவி மாதிரி இருக்கேன்.

கமல் சாரோடு ஒர்க் பண்றது பெரிய சவாலா இருக்கு. ஆச்சர்யமாவும் இருக்கு. நொடிக்கொரு உணர்ச்சி காட்டற ஒரு நடிகரை இப்போதான் பார்க்கிறேன்.

**தேவயானி திருமணத்தைப் பற்றி பக்கம் பக்கமா எழுதுறாங்கன்னு வருத்தப்பட்டீங் களாமே?**

"தன்னுடைய காதலைப் பற்றி விளம்பரம் செய்யாமல், மீடியாவுக்குத் தீனி போடாமல் அவர் திருமணம் செஞ்சிக்கிட்டது ரியலி குட். இப்படித்தான் இருக்கணும். எனது காதல் விவகாரத்தில் அவங்கவங்க இஷ் டத்துக்கு, தேவையான அளவு கற்பனை செய்து எழுதிக்கிட்டாங்க. என்னோட திரு மணத்தைத் தவிர இனிமே எழுத எதுவும் இல்லேன்னு நினைக்கிறேன்.

**நாங்க அதுமாதிரி தவறெல்லாம் செய் யறதில்லே. அதனால் எப்போ கல்யாணம் என்று எங்களுக்கு மட்டும் ரகசியமாச் சொல்லிடுங்க.**

"இன்னும் நாலைந்து மாசத்தில் நடக் கும்னு நீங்க கேட்கிறதுக்காகச் சொல்லிட லாம். ஒருவேளை நடக்காமப் போச்சுன்னா அப்புறம் தேடி வந்து கேட்டாலும் கேப் பீங்க.. அதனால நடக்கும்போது சொல்லிட் டுத்தான் செய்வோம்... அதுக்கு இன்னும் இரண்டு வருஷமாவது ஆகும்னு நினைக் கிறேன். ராஜுவும் நடிப்பு, டான்ஸ், டைரக் ஷன்னு இப்போ ரொம்ப கமிடெட். அவர் பிஸியா ஆகிறதை பார்க்குறதுல எனக்கு ரொம்ப சந்தோஷம்.

**அவர் மேலே உங்களுக்கு எப்போது ஃபர்ஸ்ட் இம்ப்ரஷன் வந்தது... ஞாபக மிருக்கா?**

முதல் பார்வையிலேயே காதல் வந்து டலே. மெல்ல மெல்லத்தான் இம்ப்ரெஸ் ஆனேன். அவர் பார்க்குறதுக்குக் கொஞ்சம் முரட்டுத்தனமான ஆசாமி மாதிரி தெரிவார். ஆனால் உண்மையில் அவர் ரொம்ப சாப்ட் டைப். ராஜுவோடு தொடர்ந்து பல படங் களில் பணியாற்றுகிற வாய்ப்பு வந்தப்போ, டான்ஸ், சினிமா, ஹாலிவுட், பேமிலி இப்படி நிறைய பேசுற வாய்ப்புக் கிடைச்சது. ஒவ் வொரு விஷயத்துலேயும் அவரோட எண் ணங்கள், அணுகுமுறை என்னை இம்ப்ரெஸ் பண்ணிச்சு.. அடுத்து அவர் பழகுற விதம். எங்கிட்டே மட்டுமில்லே எல்லோர்கிட்டே யும் ரொம்ப அன்பா பழகுவாரு. முக்கியமாக அவரோட திறமை. எங்களுக் குள்ள காதல் பத்திக்கிட்டதுக்கு இவ்வளோ காரணங்கள் போதும்னு நினைக்கிறேன்.

**எல்லாம் ஓகேங்க... தமிழ் யாருக்கிட்டே கத்துக்கறீங்க...?**

சத்தியமா யாருக்கிட்டேயும் ட்யூஷன் வெச்சுக்கலே... நானே முயற்சி பண்ணி நல்லா பேசக் கத்துக்கிட்டேன்... ஆனால் படிக்கத் தெரியாது. கொட்டையெழுத்துத் தலைப்புகளை மட்டும் எழுத்துக்கூட்டி

## நமுட்டுச் சிரிப்பு!



''குற்றப் பத்திரிகை வாங்குனதிலேர்ந்து தலைவர் தன் உடம்பு இளைக்க கடுமையா பயிற்சி பண்றாரே... ஏன்?''

''சட்டத்தோட சந்து பொந்துலே நுழைஞ்சு தப்பிக்க சுலபமா இருக்குமாம்!''

— தஞ்சை தாமு

படிப்பேன். சீக்கிரம் படிக்க கத்துக்கிட்டு தமிழ்ப் பெண்ணாவே மாறிடுவேன்."

**வாழ்த்துகள், சிம்ரன்! விடைபெறும் முன் கடைசியாக ஒரு கேள்வி. தமிழ் சினிமாவில் உங்களை வியக்க வைத்த டான்ஸ் மாஸ்டர் யாருன்னு சொல்ல முடியுமா?**

"உங்களுக்கு ஹ்யூமர் நல்லா வருது.. மெயின்டென் பண்ணுங்க... அதுக்காக சீரியஸ் ஹ்யூமரெல்லாம் பண்ணாதீங்க." – செல்லமாக சிணுங்கிய சிம்ரனிடமிருந்து விடைபெற்றோம்.

சந்திப்பு : **விஷ்ணுவல்தாசன்**

அட்டை, படங்கள் : **ஜரிஸ்**

ஜெயலலிதாவின் ஜாதகம் எப்படி இருக்கிறது என்பதைக் கணித்து, தேர்தல் முடிவு எப்படி இருக்கும் என்று மூன்று ஜோசியர்கள் 'தேர்தல் ஜோதிடம்' சொன்னார்கள். சொன்னது ஜெயா டீ.வி.யிலாகையால் என்ன சொல்லியிருப்பார்கள் என்பதைச் சொல்லத் தேவையில்லை. When two people in the same company always agree one is unnecessary என்று ஒரு ஜெர்மன் பழமொழி உண்டு. இங்கேயோ ஒத்த கருத்துள்ளவர்கள் மூன்று பேர் இருந்ததால் சுவாரஸ்யம் கம்மி.

அவர்களுடைய கணிப்பு கசப்போ இனிப்போ எப்படியோ இருக்கட்டும். ஆனால் நிகழ்ச்சியின் முடிவில் இந்த விஷு வருடம் அற்புதமாக இருக்கும், மாதம் மும்மாரி மழை பெய்யும். தொழில்களும் விவசாயமும் அமோகமாகப் பெருகும். வேலையில்லாத் திண்டாட்டம் அடியோடு ஒழியும் என்று மூவருமே அடித்துச் சொன்னது செவிக்குக் குளிர்ச்சியான செய்தியாக இருந்தது. அப்படியொரு சொர்க்க பூமி வரும் பட்சத்தில் அது கலைஞரின் ஆட்சியானால் என்ன, 'ஜெ'யின் ஆட்சியானால் என்ன?

கிராமப்புறத்திலிருந்து வரும் கள்ளங்கபடமற்ற இளைஞனை, பட்டணத்துப் போக்கிரிகள் எப்படிக் கஞ்சா, குடி, ஜேபடி முதலான அயோக்கியத்தனங்களைச் சொல்லித் தந்து கெடுக்கிறார்கள் என்பதைக் கூத்துப் பட்டறை பாணியில் ஜெயா டீ.வி. 'பூந்தளிர்' பகுதியில் நடித்தார்கள். மேக்கப்போ, பின்னணி ஜோடனையோ கிடையாது. எந்தப் பொருளும் இல்லாமல், எடுப்பது போல, வைப்பது போல எல்லாமே பாவனைகள்தான். அருமையாக ரசிக்க முடிந்தது.

Art lies in concealing art. ஆம். அறிவார்ந்த கருத்துக்கு அனாவசிய அலங்காரங்கள் எதற்கு?

இது விரல்கள் சீஸன். அரசியல் தலைவர்கள் இரட்டை விரலைக் காட்டுகிறார்கள். ஐந்து விரலைக் காட்டுகிறார்கள். தேர்தல் அதிகாரிகளோ அடையாள மையை விரல் நுனியில் வைப்பதைக் காட்டுகிறார்கள்.

ராமராஜன், 'எனக்குத் தெரிந்த தலைவர் ஒருவர்தான்' என்று ஒற்றை விரலைக் காட்டி, பிறகு இரட்டை விரலை நீட்டி, வில்லனின் இரண்டு கண்களைச் சொதக்கென்று



குத்துகிறார். ('சீறி வரும் காளை')

'ராஜராஜேசுவரி' படத்தில் ரம்யா கிருஷ்ணன் ஐந்து விரல்களை நீட்ட, ஐந்தி லிருந்தும் வரும் நகங்கள் நீண்டு நீண்டு நீண்டு எதிரியைத் தாக்குகின்றன.

பதின்மூன்றாம் தேதி, பதின் மூன்றாம் தேதி என்று எல்லா ரும் பயமுறுத்திக் கொண்டிருக் கிறார்கள். அது வரை let us keep our fingers crossed (இன் னேரம் விரலைப் பிரித்திருப்பீர் கள்)

ஒருவர் போலீஸ்காரரா இல்லையா என்பதை எப் படிக் கண்டுகொள்வது?

- தொப்பை வரும் முன்னே, போலீஸ்காரர் வருவார் பின்னே.
- பரீட்சைத் தாளில் ரைட் போடுகிற மாதிரி ஒரு விறைப்பு மீசை இருக்கும்.
- ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து அவர் கண் முன்னே காட்டுங்கள். பல்லை இளித் துக் கொண்டு பெற்றுக் கொள் வார்.



இப்படி யெல்லாம் காவலர்களைக் கிண்டல் செய்தார் விஜய்யில் 'ரீல் மச்சி'யைத் தொகுத்து வழங்கிய மங்கை. அப்புறம், எல்லை மீறி விட்டதை உணர்ந் தாரோ அல்லது போலீஸ் காரரிடம் மாட்டிக் கொள்வோம் என்று பயந்தாரோ, நாணய மான போலீஸ்காரர்களும் இருக் கிறார்கள் என்று காட்ட வேண் டிய கட்டாயத்துக்கு ஆளானார்.

## வினோத்

டூ வீலரில் வருகிற ஒருவரை நிறுத்தி, 'லைசென்ஸ் இருக்கிறதா?' என்று கேட்கிறார் போலீஸ்கார கவுண்டமணி. (எந்தப் படம்?) டூ வீலர் நபர் நோட்டை எடுத்து நீட்ட, 'நான் லைசென்ஸ் இருக்குதான்னுதானே கேட்டேன்? பணமா கேட்டேன்? ஏய்யா, நாணயமான போலீஸ்காரனை நீங்கள் கெடுத்துவிட்டு, போலீஸ்காரன் லஞ்சம் வாங்கறான்னு கூச்சல் போடறீங்க?' என்று டோஸ் விடு கிறார் கவுண்டர்.

இதைத் தொடர்ந்து, 'தங்கப் பதக்கம்', 'ஞான ஒளி', 'வல்லரசு' முதலிய படங் களிலிருந்து, நேர்மையான போலீஸ்காரர்கள் வரும் காட்சிகளையும் காட்டினார்கள். பாவம் பண்ணுவானேன், பிராயச்சித்தம் தேடுவானேன்? Never let a day go by without giving at least three people a compliment என்று ஒரு ஞானி கூறினார். அது முடியாவிட்டாலும், பொது ஊழியர்களைக் கேலி செய்யாம லிருந்தாலே போதும்.

அக்கா, ரொம்ப
டயர்டா இருப்பீங்க...
மொதல்ல ஜூஸ்
சாப்பிடுங்க...




2001 மே 20
விஷு வைகாசி 6
மலர் : 59
இதழ் : 42



# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




# மிருகபல மெஜாரிட்டி!

அவசர நிலைப் பிரகடனத்துக்குப் பிறகு இந்திரா காந்தி சந்தித்த தோல்வியும், அடுத்த தேர்தலுக்கு முன்னால் அவரே மக்களிடம் மன்னிப்புக் கோரி மீண்டும் அடைந்த மாபெரும் வெற்றியும் உலக ஜனநாயக வரலாற்றில் மைல்கல்கள்.

இந்தப் புத்தாயிரமாண்டின் தமிழக தேர்தல் முடிவும் அத்தகையதொரு மைல் கல்தான்!

'96 தேர்தலின்போது ஜெயலலிதாவின் தவறுகளுக்குத் தீர்மானமான தண்டனை வழங்கிய வாக்காளர்கள், இந்தத் தேர்தலில் கோபம் அடங்கி அவரை மன்னிக்கத் தயாராகிவிட்டார்கள்.

இத்தனைக்கும் ஜெயலலிதா, மக்களிடம் மன்னிப்புக் கோரவில்லை. தாம் தவறேதும் செய்யவில்லை என்றும் தமது பேரிலான எல்லா வழக்குகளுமே பழி வாங்குவதற்காகப் போடப்பட்ட பொய் வழக்குகளென்றும் மேடைக்கு மேடை, மூச்சுக்கு மூச்சு பிரசாரம் செய்து வந்தார். போதாக் குறைக்கு, தமது வேட்பு மனுக்கள் நிராகரிக்கப்பட்டதுகூட தி.மு.க. அரசின் சூழ்ச்சியால்தான் என்பதாகவும் ஒரு பொய்த் தோற்றம் ஏற்படுத்தி, எளிய மக்களின் அனுதாபத்தைச் சம்பாதித்துக்




கொண்டார்.

மன்னிப்புக் கோராதவரைக்கூட மக்கள் மன்னிக்கத் தயாராயிருக்கிறார்கள் என்பதைத்தான் இந்தத் தேர்தல் முடிவுகள் உணர்த்துகின்றன.

"இந்த வெற்றி நாங்கள் எதிர்பார்த்ததுதான்" - தொலைக்காட்சி பேட்டிகளில் அ.இ.அ.தி.மு.க. பிரமுகர்களும், அதன் ஆதரவுக் கட்சிப் பிரமுகர்களும் இதையே திரும்பத் திரும்பச் சொல்கிறார்கள். ஆனால், இத்தனை பெரிய வெற்றியை ஜெயலலிதாவேகூட எதிர்பார்த்திருக்கமாட்டார்!

மக்களின் தீர்ப்புக்குத் தலை வணங்கும் சமயத்தில், இனிமேல் என்ன ஆகும் என்பது குறித்தும் சிந்தித்தாக வேண்டும்.

சட்டத்தின் கண்டனத்தையும் மீறி, மக்களின் மகத்தான ஆதரவைப் பெற்றுள்ள ஒருவருக்கு முதல்வர் பதவியை மறுக்க ஆளுனர் ஃபாத்திமா பீவி மிகவும் தயக்கம் காட்டக்கூடும்.

எனவே, அடுத்த ஆறு மாதங்களுக்குச் செல்வி ஜெயலலிதா தமிழக முதல்வராகப் பதவி வகிப்பதற்குத் தடையேதும் இல்லாது போய்விடக்கூடும்.

கடந்த அ.இ.அ.தி.மு.க. ஆட்சியின்போது நடந்த வரலாறு காணாத ஊழல்களை விசாரிக்க, தமிழகத்தில் தனி நீதிமன்றங்கள் நிறுவப்பட்டுள்ளன. அவற்றில் ஜெயலலிதா பேரிலான பல வழக்குகள் இன்னமும் நிலுவையில் உள்ளன.

இந்த நீதிமன்றங்களை நிறுவியதும் தமிழக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அரசுதான்.

ஜெயலலிதா முதல்வராகும் பட்சத்தில், தனி நீதிமன்றங்களும் அவற்றிலுள்ள




அத்தனை வழக்குகளும் ஒன்றுமில்லாது போய்விடும் என்பது உறுதி. அவை அனைத்துமே பழிவாங்கும் முயற்சிகள் என்று கூறி வந்தவர் அவற்றைத் தொடரவிடவே மாட்டார்.

வழக்குகள் யாவும் வாபஸ் ஆகிவிடும் நிலையில், ஜெயலலிதா தேர்தலில் நிற்பதற்கும் தடை ஏதும் இராது. ஆறு மாத காலத்துக்குள் ஏதேனுமொரு தொகுதியில் நின்று ஜெயித்து, சட்டசபை உறுப்பினராகிவிட அவரால் முடியும்.

மத்திய அரசு ஜெயலலிதா பேரில் தொடுத்துள்ள வழக்குகளைத் தமிழக அரசால் வாபஸ் பெறச் செய்ய முடியாமல் போகலாம். ஆனால், தமிழகத்தில் நிலவும் அ.தி.மு.க. அலை கண்டு மத்திய அரசே அவ் வழக்குகளைச் சிறிது காலத்துக்குக் கிடப்பில் போட்டுவிடும் வாய்ப்பு நிறையவே இருக்கிறது.

ஏறத்தாழ மிருகபல மெஜாரிட்டியுடன், கூட்டணி கட்சித் தலைவர்களின் பணிவான தலை வணங்குதலுடன் ஆட்சியில் அமர்ந்து அதிகாரங்களைக் கையாளும் செல்வி ஜெயலலிதா, எப்படி நடந்து கொள்வார்...? எத்தகைய ஆட்சியை வழங்குவார்?... அடுத்த ஐந்தாண்டுகளுக்குத் தமிழகத்தின் கதி என்னவாக இருக்கும்...? கடந்த கால அனுபவத்தின் அடிப்படையில் கற்பனை செய்து பார்த்தால் கவலையாக இருக்கிறது.

நமது கவலைகள் பொய்யாகட்டும். மக்கள் தம்மிடம் வைத்துள்ள நம்பிக்கைக்குப் பழுதின்றி அடக்கத்துடன் ஜெயலலிதா ஆட்சி நடத்தட்டும். இன்றைக்கு அவருக்கு வாய்ப்பளித்த வாக்காளர்களும் ஆதரவு தந்த அரசியல் கட்சியினரும் நாளை ஏமாற்றமடையாமலிருக்கட்டும்! ○

டீச்சர்...
எங்க பேரெல்லாம்
கரெக்டா
சொல்லுங்க
பார்ப்போம்.

# மனசுக்குப் பிடிச்சதை மூளை பூட்டிவிடும்!

## மாண்புமிகு மெமரி - 2

திருவள்ளூர் என்.சி. ஸ்ரீதரன்

நமது நினைவாற்றலைப் பெருக்கிக் கொள்ள சில அத்தியாவசியமான விஷயங்கள் நமக்குத் தேவைப்படுகின்றன. அவை என்ன என்பதைப் பட்டியலிட்டுப் பார்ப்போம்.

இந்தப் பட்டியலில் முதலில் வருவது ஆர்வம். ஒரு விஷயத்தை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டுமென்றால், அதன்மீது நமக்கு ஆர்வமும் அக்கறையும் வர வேண்டும். உதாரணமாக, சில குழந்தைகள் கிரிக்கெட் விளையாட்டில் ஆர்வமும் அக்கறையும் கொண்டிருப்பார்கள். அவர்கள் பல துல்லியமான கிரிக்கெட் புள்ளி விவரங்களை மனப்பாடமாக ஒப்பிப்பார்கள். அந்த அளவுக்கு மனப்பாடமாக அவர்களுடைய பாடங்கள் கூட அவர்களுக்கு நினைவுக்கு வராது. ஆக, பெற்றோர்கள் எந்த ஒரு பாடத்தையோ தகவலையோ தங்களுடைய குழந்தைகளின் மனத்தில் பசுமையாகப்

படம் - 1



பதியவைக்க வேண்டுமென்றால், அவற்றின் மீது குழந்தையின் ஆர்வத்தைத் தூண்ட வேண்டும்.

அடுத்து வருவது தேர்ந்தெடுத்தல். ஒரு துறையில் உள்ள அனைத்து விஷயங்களையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டுமென்று நினைக்காமல், குறிப்பிட்ட விஷயங்களை மட்டுமே தேர்ந்தெடுத்து நினைவு வைத்துக் கொண்டால், அவை எப்போதுமே நினைவில் நிற்கும். உதாரணத்திற்கு, இலக்கியத்தை எடுத்துக் கொண்டால் இராமாயணத்தைத் தேர்ந்தெடுக்கலாம். அதை எவ்வளவுக்கெவ்வளவு ஆழமாகப் படிக்கிறோமோ அந்த அளவிற்கு அது நினைவில் இருக்கும்.

அடுத்து வருவது கவனம். எதையாவது நினைவில் வைக்க வேண்டுமென்றால் முதலில் அதில் கவனம் செலுத்திப் படிக்க வேண்டும். அல்லது கேட்க வேண்டும். சில நேரங்களில் மனத்தில் ஏற்படும் சோர்வு காரணமாகவோ, உடலில் ஏற்படும் சோர்வு காரணமாகவோ நமது கவனம் பாதிக்கப்படலாம். அதுபோன்ற நேரங்களில் படிக்கும் அல்லது கேட்கும் தகவல்கள் நமது மனத்தில் பசுமையாகப் பதியாது. அதுபோன்று சோர்வு ஏற்படும் பொழுதெல்லாம் படிப்பதை நிறுத்திவிட்டு, ஓய்வெடுத்துவிட்டு மீண்டும் படித்தால் நன்றாக நினைவில் இருக்கும். குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது, கவனம் முழுமையாக இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ள வேண்டும். அப்படி இல்லாவிட்டால் நேரம்தான் வீணாகும்.



படம் - 2

அடுத்து, புரிந்து கொள்ளுதல். குழந்தைகள் ஒரு பாடத்தை மனப்பாடம் செய்யும் பொழுது, அதை அவர்கள் புரிந்துக் கொண்டு படிக்கிறார்களா என்று பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு விஷயம் புரியவில்லை என்றால், 'புரியவில்லை' என்று தைரியமாகவும் கூச்சமின்றியும் சொல்வதற்கு உற்சாகப்படுத்துங்கள். புரியாத விஷயங்களைப் பற்றி விளக்கங்கள் கேட்பது என்பது ஒரு பழக்கம். அந்தப் பழக்கத்தை ஏற்படுத்துங்கள். ஒரு செய்யுளை அர்த்தம் புரிவதற்கு முன் மனப்பாடம் செய்து பாருங்கள். பிறகு அதையே அர்த்தம் புரிந்து கொண்டு மனப்பாடம் செய்து பாருங்கள். உங்களுக்கே வித்தியாசம் தெரியும்.

ஒரு தகவலை நினைவில் வைக்க வேண்டும் என்ற ஆவலும் நோக்கமும் இருக்க வேண்டும். எத்தனையோ தொலைபேசி எண்கள் நம் நினைவில் நிற்பதில்லை. ஆனால், நம்முடைய தொலைபேசி மட்டும் நமக்கு எப்படி நினைவில் இருக்கிறது? அவற்றை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கம் நமக்குள் அழுத்தமாக இருப்பதால்.

அடுத்து தன்னம்பிக்கை. 'எனக்கு எத்தனை முறை படித்தாலும் பரீட்சை ஹாலுக்குள் சென்றவுடன் எல்லாம் மறந்துவிடும்' என்று நினைத்துக்கொண்டே போனால், கண்டிப்பாக மறந்துதான் போகும். மாறாக, 'எனக்கு எல்லாம் நன்றாக நினைவில் நிற்கும்' என்ற மன நிலையை வளர்த்துக் கொண்டால், நம்முடைய நினைவாற்றல் கண்டிப்பாக வளரும். குழந்தைகளுக்கு

இந்தத் தன்னம்பிக்கையை நன்றாக வளருங்கள்.

ஒரு விஷயத்தை காதால் கேட்கும் பொழுதே 'இது எனக்குப் பிடித்த விஷயம், இது எனக்குப் பிடிக்காத விஷயம், இது சரி, இது தவறு' என்று பிரித்து ஆராயத் தொடங்கிவிடுகிறோம். காரணம், நம்முடைய அகங்காரம், அதாவது ஈகோ. இந்த மனநிலையில் விஷயங்களை உள்வாங்கிக் கொண்டால், அவை நமது நினைவில் நிற்காது. தகவல்களைக் காதால் கேட்கும்பொழுது நன்றாகவும் கூர்மையாகவும் கவனித்துக் கேட்டுக் கொள்ளுங்கள். அது சரியா, தவறா என்று பிறகு முடிவு எடுக்கலாம்.

ஒரு புதிய தகவலை நமது நினைவில் வைக்க வேண்டுமென்றால் அந்தத் தகவலை ஏற்கெனவே நமக்குத் தெரிந்த தகவலோடு தொடர்புபடுத்தினால், அது நமது நினைவுக்குத் தேவைப்படும்போது சுலபமாக வரும். ஆங்கிலத்தில் இதை 'அசோசியேஷன்' என்றுச் சொல்வார்கள். உதாரணமாக, இத்தாலி நாட்டின் வடிவம் எப்படி இருக்கும் என்பதை நினைவில் வைக்க, ஒரு ஷூவின் வடிவத்தை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். (படம் 1ஐப் பாக்கவும்).

நமது நினைவில் ஒரு தகவல் நிற்க நமக்குத் தேவையான மற்றொன்று, வகைப்படுத்தலும் ஒழுங்குப்படுத்தலும் (ஆர்கனைசேஷன் அண்ட் கிளாஸிஃபிகேஷன்). பல விஷயங்களை நாம் பார்க்கும்போதும் கேட்கும்போதும் அவற்றை ஏதாவது ஒரு அடிப்படையின் பேரில் ஒழுங்குப்படுத்த வேண்டும் அல்லது வகைப்படுத்த வேண்டும். உதாரணத்திற்கு நமது வீட்டுச் சமையலறையில் பருப்புக்கு இந்த இடம், மாவுக்கு இந்த இடம், எண்ணெய்க்கு இந்த இடம் என்று வைப்பதால்தானே அவற்றை எளிதாக எடுத்துக் கொண்டு கையாள முடிகிறது? நினைவாற்றலும் அவ்வாறுதான்.



படம் - 3

படம் 2ஐ ஒரு நிமிடம் பாருங்கள். பிறகு அதை மூடி வைத்துவிட்டு உங்கள் மனத்தில் பதிந்த பொருட்களை வரிசையாக எழுதுங்கள். எத்தனை பொருட்களை நினைவில் வைக்க முடிந்தது?

இப்போது படம் 3ஐ ஒரு நிமிடம் பாருங்கள். பிறகு, அதேபோல் எழுதிப் பாருங்கள். எத்தனை பொருட்களை நினைவில் வைக்க முடிந்தது?

படம் 3ஐப் பார்த்துவிட்டு எழுதியபோதுதான் அதிகப் பொருட்களை நினைவில் வைத்துக் கொள்ள முடிந்ததல்லவா?

ஏன்?

இந்தப் படத்தில், பொருட்கள் ஓர் அடிப்படையில் வரிசைப்படுத்தி வைக்கப்பட்டுள்ளதுதான் காரணம்!

(தொடரும்)

# மும்பையின் 'மாடல்' வங்கி!

டி.வி.யில் எந்தச் சானலைத் திருப்பினாலும், விளம்பரப் படங்களின் உய்யலாலா! நிலாத் துண்டு குழையும் சோப், காதலை வளர்க்கும் பற்பசை, சகல சௌபாக்கியமும் தரும் ஆரோக்கிய பானம், மாமியாரையே மக்கு அடிக்கும் மசாலாத்தூள்... இந்த விளம்பரங்களில் பதிவாகியிருக்கும் சில மும்பை முகங்களை அறிமுகப்படுத்துகிறார் மும்பை வாசகி சாரதா ஸ்ரீனிவாஸன்.



## ரோஹன் பெயிண்டர்

'தஸ்கா, புஸ்கா' என்று நடை போட்டுக் கொண்டிருந்த அம்புலிப்பருவத்திலேயே 'ஜான்சன் அண்ட் ஜான்சன்' குழந்தைகள் சோப்பு விளம்பரத்தில் ரோஹன் நடித்துவிட்டான். அதாவது சோப்புப் போட்டுக் குளித்தான் அப்புறமென்ன? சிறுவர்கள் சம்பந்தப்பட்ட எந்தப் பொருளையும் ரோஹன் மார்க்கெட் செய்ய வேண்டியதாகிவிட்டது. மேகி நூடுல்ஸ், டெட்டால் சோப், கேம்லின், மேக்ஸ் ஐஸ்க்ரீம், இப்படி நூற்றுக்கும் மேற்பட்ட விளம்பரப் படங்களில் ஐயாதான் ஹீரோ.

'அய்யப்பண்டம்மா நெய்யப்பம் சுட்டு' படத்தில் நடித்ததிலிருந்து கேரளாவிலும் இவன் பாப்புலர். "பி.பி.எல். விளம்பரத்தில் அமிதாப் அங்கிளுடனும், கங்கா சோப் விளம்பரத்தில் கோவிந்தாவுடனும் டான்ஸ் செய்தேன். ரொம்ப ஜாலியாக இருந்தது. அவங்ககிட்டே ஆட்டோகிராப் வாங்கினவங்க, என்கிட்டயும் புத்தகத்தை நீட்டினாங்க!" என்கிறான் பெருமையுடன். ரோஹனுக்குப் பிரபுதேவாவின் டான்ஸ் என்றால் உயிராம்.

'கமலஹாசனுடன் ஒரு படத்திலாவது நடிக்கணும்' - இது நீண்ட நாள் ஆசை!



# அக்ஷித் பெயிண்டர்



பெயரைப் பார்த்தாலே புரிஞ்சுடுச்சு இல்லையா? இந்தச் சுட்டி, ரோஹித்தின் தம்பியேதான். 'ஹக்கி டயாபர்ஸ்' விளம்பரத்தில் வாய் கொள்ளாமல் சிரித்து வசீகரித்த அதே லட்டுக் குட்டி.

ஜான்ஸன் பேபி ஆயில், லிவோஜன், ப்ருடின், மதுர் மசாலா, 'ஐ.சி.ஐ.சி.ஐ.' என அக்ஷித் போஸ் கொடுத்திருக்கும் விளம்பரப் படங்களின் வரிசை நீள்கிறது.

"மாடலிங் என்னோட ச்சும்மா டைம் பாஸ்னு வெச்சுக்கோங்களேன்.. பெரியவன் ஆனதும் டாக்டர் ஆகப் போறேன்." என்கிறான் அக்ஷித்.

# ஜாகி முகதம்



"முதல்ல எல்லாம் ஐஸ்க்ரீம், சாக்லேட்னு ஏதாவது குடுத்து 'மூடு' வரவழைப்பாங்க, இப்ப எனக்கு பதினோரு வயசாகுதே. அதனால ஷூட்டிங் ஸ்பாட்டுக்குப் போனதுமே மூடு கிளம்பிடும்" என்கிறான் பெரிய மனிதன்.

பிங்-பாங் லாலி பாப், பஜாஜ்பாம், க்ரீம்விச் பிஸ்கட், லிபர்டி ஷூஸ் என சின்ன ஐட்டத்திலிருந்து, கேப்டன் குக் ஆட்டா, ஸாண்ட்ரோ கார்வரை ஜாகி முகதம் 60 விளம்பரப் படங்களில் நடித்திருக்கிறான். 'ஹம் ஸாத் ஸாத் ஹை', 'சபத்', 'ஸோல்ஜர்,' 'ஹம் ஸப் ஏக்ஹை' போன்ற ஹிந்திப் படங்களிலும் நடிக்கிறான் என்பதால், நட்சத்திர ஒளி வட்டமும் சேர்ந்து கொள்ள, ஜாகியின் கால்ஷீட் ஃபுல்ஷீட்டாகியுள்ளது.

"கிரிக்கெட் பிளேயராகணும்" - இது ஜாகியின் லேட்டஸ்ட் ஆசை.

## மேகா

ரோடோமேட் பால் பாயிண்ட் பேனா விளம்பரத்தில் குறும்பு செய்த பெண்தான் மேகா... இப்போது ஸ்வீட் செவன்டீன்.

கோககோ கோர், பஜாஜ் பல்ப், கிர்னார் டீ, ரெக்ஸ் ஷூஸ், ஃப்ரூட்டி, மாருதி கார், க்வாலிட்டி ஐஸ்க்ரீம், டாடா உப்பு என பிஸியாகியிருக்கும் மேகாவின் லட்சியம் என்ன? நல்ல பாடகி ஆகணுமாம்.





## சுதா சிவபுரி

பேரைக் கேட்டால், ஏதோ வடக்கத்திய இனிப்புப் பண்டம் போலிருக்கிறது. ஆனால் சுதா பழம் பெரும் நடிகை. பாலிவுட் சினிமா ஸ்டார். ஓம் சிவபுரியின் மனைவி... டீ.வி. ஆர்டிஸ்ட். பிஸியான மாடலிங் பெண்மணி.

ஹெர்பல் கேப்ஸ்யூல்' விளம்பரத்தில் 'தாதிமா'வாக வந்ததுதான் இவரை ரொம்ப பிரபலமாக்கிவிட்டது. சோனி டீ.வி.யில் தற்போது சக்கை போடு போட்டுக் கொண்டிருக்கும் 'க்யோங்கி கபிஸாஸ் பீ ஏக் கர் வி பஹூ"தி' (மாமியாரும் ஒரு வீட்டு மருமகளே!) ஹிந்தித் தொடரில் மாமியாராக நடித்துக் கொண்டிருக்கிறார்.

"ஒரே இரவில் புகழும், கை நிறைய பணமும் பெற உதவி செய்யும் தொழில் இது. ஆனால் 'உழைப்பும் கடுமையாக இருக்கும். சிரமம் இல்லை என்றால் சிகரமும் இல்லை அல்லவா?" என்று சொல்லும் சுதா, 62 வயதிலும் தினமும் 12 மணி நேரம் உழைக்கிறாராம்.

## லதா

"சோறு? தண்ணீ? தூக்கம்? அட! இரவு... பகல்? வேலைன்னு கிளம்பிட்டா மேற்படி சொன்ன எதுவுமே எனக்குத் தெரியாது. மாடல் உலகில் என் பட்டப் பெயர் என்ன தெரியுமா? மந்திரப் பிசாசு" என்கிறார் லதா.

விளம்பரப் படங்களுக்கு ஏதாவது தென்னிந்திய முகம் தேவைப்பட்டால், ஏஜென்ஸிகளின் ஒரே சாய்ஸ் லதாதான்.

'ப்ளூ வீல்' சோப்பு விளம்பரத்தில் ஒரு கல்யாண கோஷ்டி வருமே! ஞாபகமிருக்கா..! அதில் மணப் பெண்ணின் அம்மாவாக நடித்திருப்பவர் இவர் தான். அந்த விளம்பர சம்பவத்தில், தென்னிந்திய முகங்கள் தெரிய வேண்டும் என்பதற்காக, தம்முடைய உறவினர்களையும் அசல் நாதஸ்வர வித்வான்களையும் நடிக்க வைத்ததில், காட்சி தத்ரூபமாக அமைந்து விட்டதாம்.



## அனிதா இஸ்ரானி

நீங்கள் 'கோன் பனேகா கரோர்பதி' ரசிகரா? அப்படியானால் நீங்கள் அனிதாவுக்கு நன்றி சொல்லியே ஆகனும். கே.பி.சி.யின் விளம்பர அசத்தல்களின் முழுப் பொறுப்பாளர் இவர்.

பச்சிளம் பாப்பா முதல், பல் செட் பாட்டி தாத்தா வரை, கிளி, புறா என பறப்பன முதல், நாய், பூனை என கடிப்பன வரை சகல விதமான மாடல்களுக்கும் இவரைத்தான் அணுக வேண்டும். மும்பையில் மிகப் பெரிய 'மாடலிங் பேங்க்' நடத்துகிறார் அனிதா.



''விளம்பர ஏஜென்ஸிகளின் தன்மைக்கு ஏற்ப மாடல்களைத் தேர்ந்தெடுத்துத் தருவதோடு எங்கள் வேலை முடிந்து விடாது. படப்பிடிப்புக்கு அந்த மாடல்கள் ஒழுங்காகப் போகிறார்களா, லொகேஷனில் ஏதும் பிரச்னையா, அவர்களுக்குப் பேசப்பட்ட தொகை பட்டுவாடா ஆயிற்றா... எல்லாம் கவனிக்க வேண்டும். இல்லையானால் பெயர் கெட்டுவிடும்.'' என்கிறார்.

இந்தத் துறையில் முன்னேறத் துடிப்பவர்களுக்கு அனிதாவின் அட்வைஸ் என்ன?

''காசு புரளும் எந்தத் துறையிலும், போலிகள் உருவாவதைத் தடுக்க முடியாது. மாடலிங் துறையிலும் மோசடி முதலைகள் நிறையவே உள்ளன. அதனால் கையில் அசைன்மெண்ட் வாங்கி, முறையான அக்ரிமெண்ட் போடும் வரை, யாரையும் நம்பாதீர்கள்'' என்று உஷார் படுத்துகிறார்.

## மோஹித்

'வாட்டசாட்டமாக, அழகாக உள்ள எல்லோராலும் மாடலிங் துறையில் பிரகாசித்து விட முடியாது. நடிப்புக்கான சின்னப் பொறி இருந்தால் மட்டுமே சாதிக்க முடியும்'' என்று சர்வ நிச்சயமாக கூறும் மோஹித்துக்கு இந்தத் துறையில் பத்து வருஷ அனுபவம். பேகான் ஸ்ப்ரே, ஷக்திபோக் ஆட்டா, ஸ்லீப்வெல் மேட்ரஸ், நியூட்ரின் சாக்லேட்ஸ், பிர்லா யமஹா என நிறைய விளம்பரங்களில் நடித்திருக்கிறார்.



## கௌதமி காட்கில்

கல்லூரி நாட்களில், ஏதோ ஒரு மேடை நிகழ்ச்சியில் கௌதமி தோன்றி, பார்வையாளர்களை ஒட்டு மொத்தமாகச் சுருட்டி கர்ச்சிப்புக்குள் முடிந்து கொண்டு விட்டபோது, யாரோ ஒரு மாடலிங் கோ ஆர்டினேட்டர் எப்படியோ தேடிப் பிடித்து... பின் கதை இப்படிப் போகிறது.

'லலிதா ஜுவல்லரி', 'ரமணிகா சாரீஸ்', 'ஏரியல் சோப்', 'நீம் டூத் பேஸ்ட்', 'டங்கன்ஸ் டபிள் டயமண்ட் டீ' என கௌதமி நடித்த பல விளம்பரங்கள் பிரபலமடைந்திருந்தாலும், 'கர் ஏக் மந்திர்' (தமிழில் குடும்பம்) தொலைக் காட்சித் தொடர்தான் 'அநியாயத்துக்கு இவரது ரேட்டை ஏற்றிவிட்டதாம்.



● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? "நான் முதலமைச்சராகத் தடைகள் வந்தால் அவற்றை உடைத்தெறிய உரிய நடவடிக்கைகள் எடுப்பேன்" என்கிறாரே ஜெ...?

! சட்டத்தை உடைத்தெறிவதுதான் அவர் வாடிக்கை என்பதை ஒப்புக் கொண்டு விட்டாரே. அதற்கு நன்றி சொல்ல வேண்டும்.

● ஜெ. முருகப்பன், மயிலாடுதுறை-1

? வோட்டுப் போடும்போது தங்கள் மனசாட்சி என்ன சொன்னது...?

! ப. சிதம்பரம் சொன்னதைத்தான். 'எனக்காக இந்த வாக்கைச் செலுத்தவில்லை. எனது மகன்-மகளின் எதிர்காலத்துக்காகச் செலுத்துகிறேன். தமிழன் மானத்தோடு ஆட்சி

# காமராஜரை மறந்ததே த.மா.கா...?

செய்யவேண்டும்' என்ற எண்ணத்தில்தான் வாக்களித்தேன்.

● ப. இராம் முருகன், சென்னை - 68

? 'காந்தி இப்போது இருந்திருந்தால் ஊழல் செய்யாமல் இருக்க முடியாது' என்கிறாரே திருநாவுக்கரசு... அது குறித்து?

! சில சமயம் அவர் நாவுக்கரசராக இராமல் நாவுக்கு அடிமையாகிவிடுகிறார். அத்தகைய ஒரு சந்தர்ப்பத்தில் யோசிக்காமல் உதிர்த்த வார்த்தைகளாக இருக்கும். அண்ணலைப் பற்றி அறியாதவர் என்பதாக நம்ப முடியவில்லை.

● ஏ.கே. நாசர், லெட்சுமாங்குடி.

? சமீபத்தில் ரசித்த மேடைப் பேச்சு?

! கொஞ்சம் கூட சுயநலமில்லாமல், காழ்ப்புணர்ச்சியும் இல்லாமல் ப. சிதம்பரம் வழங்கிய அறிவுபூர்வமான பஞ்சஸ்! தமிழ் நாட்டின் பேரில் அவருக்குள்ள அக்கறைக்கு ஒவ்வொரு சொல்லும் சாட்சி. தேர்தல் பிரசாரத்தின் தரத்தை உயர்த்திய முன்னோடி.



• ஒப்புதல் வாக்குமூலம்!

● சுகந்தி நாகராஜன், தேவூர்.

? கல்கி உள்பட, அனைத்து நடு நிலைப் பத்திரிகைகளும் ஜெயலலிதா தமிழக முதல்வராக வரக் கூடாது என்ற கருத்தை வலியுறுத்தி வருகின்றன. ஆனால் மக்களின் மனப்போக்கு எதிர்மறை விளைவை ஏற்படுத்தினால் உங்கள் நிலை...?

! மக்களின் தீர்ப்புக்குத் தலை வணங்குவது கடமை; ஆனால் மக்களின் தீர்ப்பு தவறு என்று சொல்வது எம் உரிமை.



• நாவுக்கடிமை!

● கல்லார் ரஹ்மத், நாகை-1

? இந்தியாவின் பெருமையை நிலைநாட்டிய விஞ்ஞானிக்கு இருக்கும் மதிப்பைவிட ஒரு சினிமா நடிகருக்கு, நடிகைக்கு மதிப்பு கூடுதலாக கிடைப்பது ஏன்...?

! பெப்சி உமா சொன்ன சம்பவம் இது: ஏர்போர்ட். விவசாய விஞ்ஞானி எம்எஸ்சுவாமிநாதனும் உமாவும் நிற்கிறார்கள்.

❒ ரூ. 50 பரிசு பெறுபவர்:
கீதா முருகானந்தம்,
1/119, வடக்குரத வீதி,
சுப்பிரமணியபுரம்,
அறந்தாங்கி தாலுகா - 614 805.

* ரூ 25 பரிசு பெறுபவர்:
தி. காளீஸ்வரி திலீபன்,
58, பலகுடி வடக்குத் தெரு,
வத்திராயிருப்பு - 626132

நீங்கள் கேட்டவை
— தராசு







போவோர் வருவோரெல்லாம் உமாவைப் பார்த்து 'ஹாய் உமா!' என்று சிரிக்க, உமாவுக்குச் சங்கடமாகி விட்டதாம். 'உலகம் போற்றும் விஞ்ஞானி அருகில் இருக்கும்போது நம்மை விசாரிக்கிறார்களே' என்று மனம் நொந்தாராம் உமா. என்ன செய்ய? டீ.வி., சினிமா மோகம் எப்போதுதான் போகுமோ!

● **எம். பிச்சைக்கனி, நெமிலி.**

? ***சுப்ரமண்யம் சுவாமி தலைமையிலான ஜனதா கட்சி கோஷ்டிப் பூசல் இல்லாமல் செயல்பட்டு வருகிறதே, இதன் ரகசியம் என்ன?***

! இருப்பதே உழக்கு... அதில் என்ன கிழக்கு-மேற்கு?...

● **பால. கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்.**

? ***அக்னி நட்சத்திர சூட்டைத் தணிக்க 'ஜில்' என்று ஒரு சுவையான நிகழ்ச்சி சொல்லுங்களேன்...***

! எழுத்தாளர்கள் முகுந்தன், அன்னம் ஆகியோர் தேவன் நினைவு அறக்கட்டளை வழங்கிய பதக்கமும் பரிசும் பெற்றனரே. நீண்ட கால எழுத்தாளர்களுக்குக் கிடைத்த நல்ல அங்கீகாரம் இந்த கோடைக்கு ஜில்.

● **ஆர்.பி. ஜெயச்சந்திரன், பூனாம் பாளையம்.**

? ***இந்தத் தேர்தலில் சோ, ப. சிதம்பரம் ஆகியோரின் பங்களிப்பு எப்படி இருந்தது?***

! இருவருமே அறிவு ஜீவிகள்தான். ஆனால் எவ்வளவு வித்தியாசம்!

சோ: முதல் கோணல் முற்றும் கோணலாக ஒரே சொதப்பல்.

சிதம்பரம்: சொல்லம்புகளைத் தேர்ந்தெடுத்தார், தொடுத்தார், எய்தார், பொய் வாதங்களைத் தகர்த்தார், உண்மைகளை நிலைநாட்டினார்.

● **தாமல் கண்ணன், பெங்களூர்.**

? ***குளோபல் வில்லேஜ் என்கிறீர்கள்... அண்டை மாநிலமான கர்நாடகாவில் தமிழர் நிலை இழிநிலை. காவிரி நீர்ப் பிரச்னையும் வள்ளுவர் சிலையும்...?***

! விஞ்ஞான வளர்ச்சியால் உலகம் குன்றி விட்டது; எல்லைகள் தகர்ந்துவிட்டன. அந்த வேகத்துக்கு மனத்தடைகளும் ஜாதி, மத, மொழி, இன வேறுபாடுகளும் நீங்க வேண்டும் என்பது இன்னும் முக்கியமாகிறது.

● **கீதா முருகானந்தம், அறந்தாங்கி.** ❒

? ***தமிழ் மாநில காங்கிரஸ் தனது தேர்தல் அறிக்கையில் காமராஜரின் புகைப்படத்தைக் கூட வெளியிடவில்லையே, ஏன்...?***

! நல்லகாலம்! பெரும் அவமானத்திலிருந்து பிழைத்தார் பெருந்தலைவர்.

● **இ. கானீஸ்வரி திலீபன், வத்திராயிருப்பு** ✱

? ***டி. ராஜேந்தர் தேர்தல் பிரசார கூட்டத்தில், 'சாலை வசதி செய்தவர் கலைஞர், சேலை வாங்கிக் குவித்தவர் ஜெயலலிதா' என்று பேசியது பற்றி...?***

! வார்த்தை விளையாட்டுதான் என்றாலும் உண்மை இருப்பதால் ரசிக்க முடிகிறது. ஆனால் "கீழ்ப்பாக்கத்தில் நிற்க வேண்டியவர் சேப்பாக்கத்தில் நிற்கிறார்" என்ற ஈ.வி.கே.எஸ். இளங்கோவனின் மொழி ஜாலம் தரக்குறைவானது. ஈ.வி.கே. சம்பத்தின் ஆத்மா மன்னிக்காது.



# டயபடீஸ் தாக்குதல்!

'கடந்த இருபத்தைந்து வருடங்களில் டயபடீஸ் (நீரிழிவு) நோய் சுமார் அறுநூறு சதவிகிதம் வளர்ந்து மக்களைத் தாக்கி வருகிறது. வரும் ஆண்டுகளில் இது மும்மடங்கு பெருக வாய்ப்பு இருக்கிறது!' - பயமுறுத்திய இந்த 'பிட்டர் நியூஸை'த் தூக்கிக் கொண்டு சென்னை எம்.வி. டயபடீஸ் ஸ்பெஷாலிடி சென்டரின் தலைமை மருத்துவர் டாக்டர் வி. மோகனிடம் சென்றோம். சில விளக்கங்கள் கேட்டோம்.

**இந்தச் செய்தி ரொம்ப பயமுறுத்துகிற மாதிரி இருக்கிறதே?**

உண்மை நிலை அதுதான். 1975ல் 2% என்று இருந்தது போய் 13% அளவுக்கு அதிகரித்து விட்டது.

**நகர்ப்புறத்தில் இருக்கிற அளவுக்கு, கிராமப்புறங்களிலும் இருக்கிறதா?**

நகர்ப்புறத்தில் இருக்கிற அளவுக்குக் கிராமப்புறங்களில் இல்லை என்றாலும், அங்கேயும் டயபடீஸ் நோய் அதிகமாகப் பரவி வருகிறது. முன்பு மக்களில் ஒரு சதவிகிதம் பேர் மட்டுமே கிராமப்புறங்களில் பாதிக்கப்பட்டு இருந்தார்கள். இன்று ஐந்து ஆறு சதவிகிதமாகிவிட்டது.

ஆனால் நகர்ப்புற மக்களின் உணவுப் பழக்கம் போல் அல்லாமல், கிராமப்புற மக்கள் கஞ்சி, ராகிக் கூழ், காய்கறிகள் சாப்பிடுவதால் இது இன்னும் கூடாமல் இருக்கிறது.

நகர்ப்புற மக்கள் அப்படி அல்ல. முன்பு ஃபாஸ்ட் ஃபுட் உணவகங்கள் எத்தனை இருந்தன? இப்போது எத்தனை அதிகரித்து விட்டன! ஒரு பீட்ஸா ஆயிரத்து இருநூறு கலோரி. ஹம்பர்கரில் இருக்கும் மாமிசம் எத்தனை கலோரி! சாதாரண குடும்பங்களில் கூட பீட்ஸாவைச் சாப்பிடுவது அதிகரித்து வருகிறதே!

உடற்பயிற்சி விஷயத்திலும் அக்கறை குறைந்து வருகிறது. கிராமப்புறங்களிலாவது அவர்கள் விவசாயத்திலும், வீட்டு வேலைகளிலும் தங்கள் கூடுதல் கலோரிகளைச் செலவழிக்கிறார்கள். நகரங்களில் நாற்காலி விட்டால் கார் அல்லது ஆட்டோ அல்லது பஸ். வெகு சிலரே ஜாகிங், வாக்கிங் என்று பழக்கம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

**வேறு என்ன காரணம் சொல்லுவீர்கள், டாக்டர்?**

நெருங்கிய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் செய்து கொள்ளும் திருமணம் இன்னொரு முக்கிய காரணம். இரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் டயபடீஸ் நோய் பரம்பரையாகவே உள்ளவர்களாக இருந்தால் சந்ததியினருக்கு இந்தத் தாக்குதல் வர அதிகப்படியான வாய்ப்பு இருக்கிறது. டபுள் டோஸ் என்பார்களே, அப்படி. தாயார் தகப்பனாரில் யாராவது ஒருவருக்கு இருந்தாலும் டயபடீஸ் வரும்.

**டயபடீஸ் இதயத்தை எப்படி பாதிக்கிறது?**

சர்க்கரை வியாதி இருக்கிறவர்களுக்கு இரத்தக் குழாய் அடைப்பு வரும். இரத்த அழுத்தம் கூடும். கொலஸ்ட்ரால் அதிகரிக்கும். இதயத் தசை 'வீக்'ஆகும். இதயம் பெரிதாகும். இதனால் ஹார்ட் ஃபெய்லியர் ஆகும் வாய்ப்பு உண்டாகும். இது முதல்படி. கவனிக்காமல் விட்டால், ஹார்ட் அட்டாக் வரும்!

**டயபடீஸ் சிறுநீரகத்தை எப்படி பாதிக்கிறது?**

எப்படி பெரிய இரத்தக் குழாய் அடைப்பு இதயத்தைப் பாதிக்கிறதோ, அப்படியே சிறிய இரத்தக் குழாய் அடைப்பு சிறுநீரகத்தைப் பாதிக்கிறது. முதலில் உப்புச் சத்து (அல்புமென் சால்ட்) போகத் தொடங்கும். பிறகு யூரியா அதிகமாகி, டயாலிஸிஸ், கிட்னி ட்ரான்ஸ்ப்ளாண்ட் என்று நிலைமை மோசமாகும்.

**கண்ணை எப்படி பாதிக்கிறது, டாக்டர்?**

இதுவும் சின்ன இரத்தக் குழாய் பாதிப்பு காரணமாகத்தான் உண்டாகிறது. ரத்தக் குழாயில் சர்க்கரையின் பாதிப்பு உண்டாகி, நீர் கசிய ஆரம்பித்து, கண்ணுக்குள் நீர் கோத்துக் கொண்டு விடும். கடைசிக் கட்டமாக, சின்ன இரத்தக் குழாய் வெடித்து, பார்வை உடனே போய்விடும் அபாயம் இருக்கிறது.

பயமுறுத்துவதற்காகச் சொல்லவில்லை. அலட்சியப்படுத்தினால் என்னென்ன விளைவுகள் உண்டாகும் என்பதற்காகவே சொல்லுகிறேன்.

அதிகமான உடல் பருமன், உடற்பயிற்சி இல்லாமை, பரம்பரையாகவே டயபடீஸ் உள்ள குடும்பங்களிடையே, உறவு விட்டுப் போய்விடாமல் இருப்பதற்காகச் செய்து கொள்ளப்படும் திருமணங்கள் இவை டயபடீஸ் நோயாளிகளின் எண்ணிக்கை பெருகக் கூடுதலான காரணங்கள்.

இருபது வயதுக்குப் பிறகு டயபடீஸ் சோதனை செய்து கொள்ளுவது நல்லது. ஆரம்பத்திலேயே கண்டுபிடித்து, கட்டுப்பாடு, பயிற்சிகள் மேற்கொண்டால் தடுக்கலாம்.

டயபடீஸ் நோயாளிகள் அதிகம் உள்ள நகரத்தில் முதலிடம் ஹைதராபாத்துக்கு. அடுத்தது சென்னைதான்! மும்பை மூன்றாவது இடம். தில்லி, பெங்களூர் நாலு, ஐந்தாவது இடங்களில் இருக்கின்றன.

சந்திப்பு: **எஸ்.வி.என்.**

# ஹைதர்அலி சூட்கேஸ்!



திருச்சி, பாரதிதாசன் இன்ஸ்டிடியூட் ஆப் மேனேஜ்மென்ட்டின் எம்.பி.ஏ. மாணவர்கள் ஏழு பேர் பெங்களூரில் நடைபெற்ற கருத்தரங்கில் ஒரு வாரம் கலந்து கொண்டு திரும்புகிறார்கள்.

விடுதியை அடைந்தவுடன் அவரவர் பெட்டிகளையும், தோல் பைகளையும் எடுத்துக் கொள்ள, மிச்சப்பட்டுப் போனது ஒரு சூட்கேஸ். யாருடைய பெட்டி அது? நடந்த தவறு இதுதான். இறங்கும் அவசரத்தில் மாணவர்கள் தங்களுடைய லக்கேஜுடன் அந்தப் பெட்டியையும் சேர்த்துத் தவறுதலாக எடுத்துக்கொண்டு வந்துவிட்டார்கள்.

பெங்களூருக்கு அவர்களை வழி நடத்திச் சென்ற மூன்று மாணவர்கள் குழுவிடம் அந்தப் பெட்டி ஒப்படைக்கப்பட்டது. அசோக் மேத்தா, கண்ணன், சுந்தரமணி ஆகிய மூவரும் எப்படியோ முயன்று பெட்டியைத் திறந்து பார்த்தால், பேரதிர்ச்சி. பெட்டி முழுவதும் கட்டுக் கட்டாகப் பணம்!

சூட்கேஸின் உள் அறையைத் துழாவியதில் ஒருவரது அடையாள அட்டையும், தனியார் நிறுவனத்தின் கடிதமும் ஆதாரங்களாகக் கிடைத்தன. கேரளாவின் எர்ணாகுளம் மாவட்டத்தில் மூவாற்றுபுழாவில் அமைந்துள்ள இரும்புக் கம்பெனியின் கிளை அலுவலகம் நாகப்பட்டினத்தில். அதன் அலுவலக ஊழியர்களின் சம்பளப் பட்டுவாடாவுக்கு அனுப்பி வைக்கப்பட்ட பணம். எவ்வளவு பணம், கொண்டு வருபவர் யார் என எல்லாவிவரமும் அந்த லெட்டர் ஹெட்டில் டைப் செய்யப்பட்டிருந்தது. பணம் ரூபாய் ஒரு லட்சத்து எழுபத்தியெட்டாயிரத்து எண்ணூறு.

அந்தக் கம்பெனியின் பிரதிநிதி ரபி ஹைதர் அலி என்பவர் பணத்தைக் கொண்டு வந்துள்ளார். எர்ணாகுளத்திலிருந்து திருச்சி வந்தவர் நாகை செல்ல வேண்டி தஞ்சாவூர் பஸ்ஸில் ஏறி அமர்ந்துள்ளார். பணத்துடன் சூட்கேசை மேலே வைத்தவர் பஸ் கிளம்பியவுடன் தூங்கிப் போய்விட்டார். மாணவர்கள் இறங்கும்போது அவர்களது லக்கேஜுடன் தமது கம்பெனி சூட்கேசும் கலந்துபோய் விட்டதைக் கவனிக்கவில்லை ஹைதர் அலி.

மாணவர்கள் மூவரும் வேகமாகச் செயல்பட்டிருக்கிறார்கள். திருவெறும்பூர் காவல் நிலையத்தில் எல்லா விவரங்களையும் கூறி, பணத்துடன் கூடிய சூட்கேசை ஒப்படைத்திருக்கிறார்கள். திருச்சி மாவட்ட எஸ்.பியான ஜெயந்த் முரளிக்குத் தகவல் தெரிந்தவுடன் சம்பந்தப்பட்ட கேரள கம்பெனிக்கும், நாகை கிளைக்கும் விவரம் தந்ததோடு தஞ்சை பேருந்து நிலைய புறக்காவல் நிலையத்திற்கும் தகவல்கள் தரப்பட்டன. தஞ்சை பேருந்து நிலையத்தில் இறங்கிய ஹைதர் அலிக்கு இன்ப அதிர்ச்சி.

சூட்கேஸ் ஹைதர் அலியிடம் ஒப்படைக்கப்பட, நன்றி சொல்ல வார்த்தை கிடைக்காது திண்டாடிவிட்டார் ஹைதர் அலி. மாணவாஸ்... நல்ல மாணவாஸ்தானே!

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

**வ**ழக்கமான எங்கள் கதைப் படலத்தை நான் பலத்த பீடிகையுடன் சொல்ல ஆரம்பிக்க, என் குழந்தை வித்யா ஆர்வத்தோடு கேட்கத் தயாரானாள்.

"மணி பதினொண்ணு அடிச்சாப் போதும். ரீஸஸ் பீரியட்னு ஒண்ணு விடுவாங்க ஸ்கூல்ல. ஒண்ணுக்குப் போக.. தண்ணி குடிக்க.. ஏதாவது வாங்கித் தின்ன...ன்னு சொல்லி ஒவ்வொரு குழந்தையும் நாலு கால் பாய்ச்சல்ல தாவிக் குதிச்சு வெளியில ஓடும்.

"இந்த ரீஸஸ் பீரியடுக்காகவே பள்ளிக்கூடத்துக்குப் பக்கத்துல திமுர் திமுர்னு கடைகள் முளைக்கும். அதுல அந்தச் சமயத்துல சீவல் ஐஸ் ரொம்ப ஃபேமஸ். பஜ்ஜிக்கு வாழைக்காய் சீவற கட்டை பாத்திருக்கீல்லம்மா. அது மாதிரி ஒரு கட்டையை எடுத்து அது மேல பெரிய்...ய ஐஸ் கட்டி ஒண்ணை வெச்சு 'சர்...ரக் சர்...ரக்'னு சீவுவார் ஐஸ் மாமா. பொடிப் பொடியான ஐஸ் துண்டுக அவர் கீழே பிடிச்சிருக்கற கண்ணாடி தம்ளர்ல சரசரன்னு விழும். நாலணா கொடுத்தா பாதி தம்ளரும் எட்டணான்னாக்க முழு தம்ளரும் ஐஸை ரொப்புவார். அப்புறமா, சிவப்பு கலர் மஞ்ச கலர்னு கலர்ச் சாயத்தை அந்த தம்ளர்ல ஊத்துவார். அந்தச் சாயம் அப்படியே ஐஸ் கட்டில கொஞ்சம் கொஞ்சமா இறங்கி அந்த தம்ளரே ஜகஜ்ஜோதியா மினுக்கும்.

''எல்லாப் பையங்களும் வாங்கிச் சாப்பிடற சீவல் ஐஸை அந்தப் பையன் – அவன்தான் இந்தக் கதையோட ஹீரோ – ஏக்கமா பாப்பான். அதை வாங்கிச் சாப்பிடறதுக்கு அவன்ட்ட காசு இருக்காது. சீவல் ஐஸ் ஏன்... குச்சி ஐஸ் வாங்கிச் சாப்பிடறதுக்குக் கூட அவன் அம்மா அவனுக்கு அஞ்சு பைசா தரமாட்டா. அப்பல்லாம் ஒரு குச்சி ஐஸ் அஞ்சு பைசாதான். அந்தப் பையன் ஐஸ் வண்டி பக்கத்துல போய் நின்னு அவரையே ஏக்கமா பாப்பான்.




"அவனுக்குப் பள்ளிக்கூடத்துல வாங்கித் திங்கற நொறுக்குத் தீனி மேல அப்படி ஒரு ஆசை."

நான் இதைச் சொல்லிக் கொண்டிருக்கும்போது என் மனைவி அங்கு வர, என் குழந்தை அடக்க இயலாத ஆர்வத்தோடு, "அம்மா... அப்பா இன்னிக்கு உண்மைக் கதை சொல்றாரும்மா..." என்று கூவினாள்.

தினமும் நடக்கும் 'கதைப் படலம்' என்பதால் என் மனைவி ஆர்வம் காட்டவில்லை.

"தேன் மிட்டாய், தேங்கா மிட்டாய், சூட மிட்டாய், பந்து மிட்டாய், இஞ்சி மிட்டாய்னு ஒரு பரந்த மிட்டாய் உலகமே அங்க இருக்கும். அந்தப் பையன், எந்தக் கடையிலயாவது தனக்குத் தெரிஞ்ச பையன்க இருக்காங்களான்னு எம்பி எம்பிப் பாப்பான். சில நாள், சில பையங்கள்ட்ட, 'டேய், ஒரு மிட்டாய் தாடா... ஒரு குச்சி ஐஸாவது வாங்கித் தாடா'ன்னு கெஞ்சிக் கேட்டு ஓஸில வாங்கிச் சாப்பிடுவான். ஆனா, இவன் தெனம் ஓஸி கேக்கறதைப் பாத்த பையங்கள்லாம் இவன் தலையைப் பாத்தோன்னயே ஓடி ஒளிஞ்சுக்க ஆரம்பிச்சாங்க. அது இவனுக்கு ரொம்பக் கஷ்டமா இருந்துச்சு.

"இப்படி இருந்தவனுக்கு, தனக்கே தனக்குன்னு நாலணா கிடைச்சா எப்படி இருக்கும்...? அவனுக்கு ஒரு நாள் கிடைச்சுது. அவன் கிளாஸ்ல அறிவியல் பாடம் எடுக்கற டீச்சர், அறிவியல்ல முதல் மார்க் வாங்கற பையனுக்கு நாலணா பரிசுன்னு சொல்லியிருந்தாங்க. அதுல அவன் முதல் மார்க் எடுத்து அதன் மூலம் நாலணா கிடைக்க, அவன் நாலணாவுக்கும் கல்கோனா வாங்கினான்."

இதை நான் சொன்ன

**நந்தன்**



போது என் மகள், "கல்கோனான்னா என்னப்பா?" என்று கேட்டாள்.

"கல்கோனா ஒரு சூப்பரான மிட்டாய் வித்யா. பொட்டுக்கடலைன்னு நினைக்கறேன். நறநறன்னு பொடிச்சு அதை முறுகிய வெல்லப்பாகுல பெரட்டி உருண்டை உருண்டையா உருட்டி வெச்சிருப்பான். கல்லு மாதிரி இருக்குண்டா கண்ணு. ஆனா அதோட சுவை தேவாமிர்தம்தான். அதை வாயோரத்துல அதக்கிட்டுப் போனா கன்னம் புஸ்னு உப்பிக் கிடக்கும். சட்டுனு கரைஞ்சுடாது. ஆனா சொட்டுச் சொட்டா தேன் மாதிரி அது தொண்டைக்குள்ள இறங்கும் பாரு... அமிர்தமா இருக்கும்.

"இருபத்தஞ்சு பைசாவுக்கு அஞ்சு கல்கோனா வாங்கி அத்தனையையும் தானே தின்னான்.

"இந்தச் சமயத்துலதான் அந்தப் பையனுக்கு ரமணன்னு ஒரு ஃப்ரெண்டு கெடைச்சான். ரமணன் தெனமும் பஸ்ஸுல வர்றவன். ஆனா நம்ப பையனோ தினம் ஸ்கூலுக்கு சைக்கிள்ல போய்ட்டு வர்றவன். ரெண்டு பேரும் அடுத்தடுத்த தெருவுல உள்ளவங்கதான்.

"அப்பத்தான் இந்தப் பையனோட தந்திர மூளை ஒருவேலை செஞ்சிச்சு. ரமணனை தினம் தன்னோட சைக்கிள்ல கூட்டிட்டுப் போய் அவன் வெச்சிருக்கற பஸ் காசை ரெண்டு பேருமா மிட்டாய் வாங்கிச் சாப்பிடறதுங்கறதுதான் அந்தத் தந்திரம். இது சில நாள் நடக்க, நம்ப பையன் அந்த நாட்கள்ல பயங்கரமான சந்தோஷத்துல இருந்தான்.

ஒருநாள் மிட்டாய் வகை, அடுத்த நாள் ஐஸ் வகைன்னு மாத்தி மாத்தி ஒவ்வொரு நாளும் விதவிதமா வாங்கித் தின்னான். ரமணனோட பஸ் பைசா இருப்பத்தஞ்சு காசுல இவனுக்கு இருபது பைசா. ரமணனுக்கு அஞ்சு பைசா.

இவன் சைக்கிள் ஓனரில்லையா...! இந்த விகிதாச்சாரப் பங்கீடு இவனோட யோச னைதான். ரமணன் அப்பாவி. இவன் சொல் றதுக்கு எதிர்க்கேள்வி இல்லாமத் தலை யாட்டுவான்.

நம்ப ஆளோட இந்தச் சந்தோஷத்துக்கும் ஒருநாள் தடை வந்துது. ரமணனோட அப்பா அவனுக்கும் சைக்கிள் வாங்கிக் கொடுத்துட்டார். ரமணன் பயங்கர சந் தோஷத்தோட புதுச் சைக்கிள்ல ஸ்கூலுக்கு வர ஆரம்பிச்சுட்டான்.

"அவனுக்குத் திரும்பவும் மிட்டாய், ஐஸ் லாம் கிடைக்காம ரொம்பக் கஷ்டமா யிடிச்சி.

அப்பத்தான் அவனுக்கு ஒரு யுக்தி தோணுச்சு. அது யுக்தி இல்ல, குயுக்தி. அவன் அப்பா சட்டைப் பைல நிறையப் பணம் வெச்சிருக்கறத அவன் நிறைய தடவை பாத்துருக்கான். 'ஐயோ... இவ்ளோ பணம் வெச்சிருக்காரே, அவ்ளோத்துக்கும் மிட்டாய் வாங்கினா எவ்ளோ இருக் கும்...!?'னு யோசிச்சு சில நாள் மலைச்சுப் போயிருக்கான். நிறைய மிட்டாய் வாங்கி ஜோபி ரெண்டுலயும் நிறைய ரொப்பிக் கிட்டு, ரொம்பக் கெஞ்சிக் கேக்கற ஒருத்தன் ரெண்டு பேருக்கு மாத்திரம் கொடுத்துட்டு, மீதியெல்லாத்தையும் நாமே தின்னு... இது மாதிரி முன்னாலேயே சில நாள் அவன் யோசிச்சிருக்கான்.

"ஆனா அந்த எண்ணம் அவனுக்கு இப் போது மனசுல வலுவா இருந்துது. இத்தனை நாள் வரை ரமணனோட தயவால் ஏகப் பட்ட மிட்டாய்களை ருசி பார்த்ததால அவ னுக்கு இந்த எண்ணம் இப்போ அழுத்தமா தோண ஆரம்பிச்சுது. நாக்கு ரொம்பவும் அரிச்சுது. அப்பா கேட்டாலும் தர மாட் டார். அம்மாட்ட பத்து பைசா பெயர னும்னா பத்து நாளாகும்.

அவனுக்கு நல்லா ஞாபகமிருக்கு. வீட்டு வாசல்ல ஐஸ்காரர் மணி அடிச்சிட்டே வருவார். மணிச்சப்தம் கேட்டோன்னயே இவன் அம்மாட்ட கெஞ்ச ஆரம்பிப்பான். அம்மா லேசுல மசிய மாட்டா. இவனும் விடாமக் கெஞ்சுவான். ஐஸ்காரர் நிதானமா அந்தத் தெரு தாண்டி அடுத்த தெருவும் தாண்டி, அதற்கடுத்த தெருவுக்குப் போயி ருப்பார். கால் மணி நேரக் கெஞ்சலுக்குப் பிறகுதான் அம்மாவுக்குக் கரிசனம் பிறக்கும். போனாப் போறதுன்னு அம்மா அஞ்சு பைசா தருவா. அவன் தம்ளரை எடுத்துக் கிட்டு, அம்மா கொடுத்த அஞ்சு பைசாவை இறுக்கமா உள்ளங்கைக்குள்ள அடக்கிக்கிட் டுக் குறுக்கு வழியில் தெருக்கள் தாண்டி ஓடுவான். கல்லும் முள்ளும் தாண்டி ஓடி ஏதோ ஒரு மூலைல போய்ட்டிருக்கற ஐஸ் காரரைப் பிடிச்சு ஐஸ் வாங்குவான். அவ னுக்கு எந்த ஒரு பண்டமும் தன் வீட்டு வாசல்ல நின்னு வாங்கித் தின்னதா ஞாபக மேயில்ல.

"அம்மா இப்படியா...? சக பையன்களோ 'ஓசி கேஸ்'னு பட்டப் பெயர் வெச்சு கேலி பண்ண ஆரம்பிச்சுட்டாங்க. அவுங்க மூஞ்சி லயும் கரியப் பூசணும்னு அவன் துடிச்சான்.

"அதனால அப்பா சட்டைப் பைலேர்ந்து பத்து ரூபா எடுத்தால் என்ன...?

"எல்லா நினைப்புகளும் ஒண்ணாச் சேந்து கிட்டு அவனை உசுப்பி விட்டுடுச்சு. அவன் ஸ்டூல்ல ஏறி ஹேங்கர்ல தொங்கின அப்பா வோட சட்டைப் பைலேர்ந்து பத்து ரூபாயை எடுத்தான். பணத்தைக் கைல எடுத் தோன்னதான் அவனுக்கு அந்தப் பணத்தை எங்க ஒளிச்சு வெக்கறதுன்னு கேள்வி

## திடீர்ப் பரிசுப் போட்டி – 4 முடிவு

வந்து குவிந்த ஜோக்குகளில் பெரும் பான்மையானவை 'ஜிம்மியும் வோட்டுப் போடணுமாம்'. 'டிரஸ்ஸுக்கு மேட்சா அடையாள மை வைக்க ணுமாம்.' 'ரீடேக் கேட்க றாங்க' என்ற பாணி யிலேயே இருந்ததால் கொஞ்சம் புதுசாக யோசித்திருந்த...

**லட்சுமி ஆவுடைநாயகம்,**

(20, மகாலட்சுமிதெரு, மடிப்பாக்கம், சென்னை – 91.) பரிசு பெறுகிறார்.

**ரூ. 100/- ஜெயிச்ச ஜோக் இதோ!**

"வோட்டுப் போட வந்த நடிகை நளினாஸ்ரீ என்னயா தகராறு பண்றாங்க!"

"அவங்க போன தேர்தலல வோட்டுப் போடலையாம்... அதையும் சேர்த்து இப்ப போடுவேன்னு அடம்பிடிக்கறாங்க...!"

வந்துது. பலமா மூளையைக் கசக்கி யோசிச்சுப் பாத்தும் அவனுக்கு பாதுகாப்பான இடம்னு ஏதும் தோணலை. எங்க வைச்சாலும் மாட்டிக்குவோம்னு பயமாவே இருந்துச்சு. கடைசில அரைகுறை அவநம்பிக்கையோட அந்தப் பணத்தை கணக்குப் புத்தகத்துக்குள்ள ஒளிச்சு வெச்சான்.

அன்னி ராத்திரி வீட்டுப் பாடம் எழுதறபோது அவனும் எவ்வளவோ ஜாக்கிரதையாத்தான் கணக்குப் புத்தகத்தைக் கையாண்டான். பக்கத்தை விரித்து கணக்கை பார்த்துவிட்டு உடனே பையில் மற்ற புத்தகங்களுக்கு அடியில் புதைத்து வைப்பான். இருந்த போதும் அது அம்மா கண்ணுல தட்டுப்பட்டுடுச்சு.

''அம்மா, 'ஏதுடா பத்து ரூபா...'ன்னு மிரட்டிக் கேட்கவே, இவன் உளறி விட்டான். அம்மா, இவன் திருடியிருக்கான் கறதைப் புரிஞ்சிக்கிட்டு உடனே அப்பாட்ட சொல்லிட்டாங்க. அப்பாவுக்குக் கோபம் தலைக்கேறிடிச்சி. கன்னம் செவக்கற அளவுக்கு அறைஞ்சார். அப்புறம் குச்சியெடுத்து அவன் பிட்டத்துல 'பளீர் பளீர்'னு அடி பின்னிட்டார்.

''அன்னி ராத்திரி முழுக்க அழுதுகிட்டே தூங்கியிருக்கான்.

''அடுத்த நாள் காலைல அம்மா அவன்ட்ட அன்பாப் பேசினா. குளிப்பாட்டி விட்டா. அவனுக்குப் புடிச்ச பூரி செஞ்சு வெச்சிருந்தா. இதெல்லாத்தையும் விட அவன் ஸ்கூலுக்குக் கிளம்பற போது, 'மிட்டாய் வாங்கிக்க'ன்னு அவன்ட்ட நாலணா கொடுத்தனுப்பினா. அவன் அதை வாங்கி ஜோபில வெச்சுக்கிட்டான்.

''அப்பா, அவனை சைக்கிள்ல ஸ்கூலுக்குக் கூட்டிட்டுப் போனார். ஸ்கூல் முக்குல இறங்கின அவன் அப்பாவுக்கு 'தேங்க்ஸ்' சொன்னபோது, அப்பா, 'தேங்க்ஸ்லாம் கிடக்கட்டும். நல்ல பையனா இருக்கக் கத்துக்கோ'ன்னு 'வெடுக்'குனு சொன்னார்.

''அன்னிக்குப் பள்ளிக்கு இடைவேளை விட்ட போது அவன் மிட்டாய் கடைக்குப் போய் மரத்தடில நின்னான். ஜோபில அம்மா கொடுத்த நாலணா இருந்தது. இருந்தும் அவனுக்கு ஏனோ மிட்டாய் வாங்கித் திங்கணும்னு தோணலை. மணி அடிச்சதும் அவன் க்ளாஸ் ரூமுக்கு வந்து உக்காந்துட்டான்...''

சொல்லிக் கொண்டிருந்த கதையை நான் முடிக்கும் சமயத்தில் கேட்டுக் கொண்டிருந்த என் குழந்தை வித்யா ஆழமான மௌனத்திலிருந்தாள். வழக்கமாய் நான் கதை சொல்லி முடிக்கும் சமயத்தில் உற்சாகமாய்த் துள்ளிக் குதிக்கும் பெண், இன்று இறுக்கமாய் அமர்ந்திருந்தாள்.

''வித்யா குட்டி... இது உண்மைக் கதைன்னு சொன்னேன்ல்லியோ... அந்தப் பையன் யாரு தெரியுமா?'' என்று கேட்டேன்.

அதைத் தெரிந்து கொள்ள ஏனோ அவள் அதிக ஆவல் காண்பிக்கவில்லை.

இருந்தபோதிலும், நானே வலியச் சொன்னேன். ''உன் அப்பா - நாந்தாண்டி கண்ணு, அந்தப் பையன். சின்னப் பையனா இருக்கறச்ச நான்தான் இது மாதிரி திருடினேன்.''

நான் சொல்லி முடித்ததுதான் தாமதம். என் மகள் என் அருகில் அணுக்கமாய் வந்து அமர்ந்து கொண்டாள். வாஞ்சையாய் என் கைவிரல்களைக் கோத்துக் கொண்டாள். தாழ்ந்திருந்த அவள் விழிகளில் திரையிட்டிருந்த நீரின் ஓரிரண்டு சொட்டுக்கள் என் மேல் விழுந்தன.

அன்று இரவு உறங்கும் போது, என் மகள் என்னை இறுக்கமாய் அணைத்துக் கொண்டு படுத்திருந்ததாய், மறுநாள் காலை என் மனைவி சொன்னாள். மனசு தித்தித்தது. ○

## பரிதாபச் சிரிப்பு!



**''உன் அப்பா ராக்கெட் நிலையத்தில் வேலை பார்க்கிறாரா?''**

**''ஏன் டீச்சர்?''**

**''வகுப்பில் மார்க் 9,8,7 என்று குறைந்து கொண்டே போகிறதே?''**

**- எஸ். மோகன்**



எம்.எஃப். ஹுசேனுக்கு மாதுரி தீக்ஷித் போல, ஓவியர் ராஜ பரணிக்குக் கலைஞர். விதவிதமாய் வரைந்து தள்ளியிருக்கிறார்.

''கலைஞரைப் பார்த்தா இயற்கையா பிறந்து வளர்ந்தவர் மாதிரி இருக்காது. 100% இலக்கியம், 100% சினிமா, 100% கலை, 100% அரசியல்னு சேர்த்துக் கலந்து, ஆராய்ச்சிக் கூடத்துல ஸ்பெஷலா தயார் பண்ணின மாதிரி இருக்கும். ரொம்ப சின்ன வயசுலேயே கறுப்புக் கண்ணாடியும், மூணு வரி போட்ட நெற்றியும் போட்டு, கலைஞரை கார்ட்டூனா வரைவேன். அந்த மோகம் இப்பவும் தொடருது.'' என்கிறார் ராஜ பரணி.







ஓவியக் கல்லூரியில் படித்த இவர் எம்.ஏ. பட்டதாரியும் கூட.

கலைஞரை அப்படியே வரையாமல், கை ரிக்ஷா ஒழிப்புத் திட்டம், கண்ணொளி வழங்கும் திட்டம், சமத்துவபுரம் என அவருடைய சாதனைகளையும் விளக்குகிற மாதிரி, அருகிலேயே கார்ட்டூன் வரைந்திருப்பதுதான் சிறப்பம்சம். அவற்றை பார்த்த ராஜபரணியின் நண்பர் கவிஞர் இந்திரன், ஐ.ஏ.எஸ். அதிகாரி வெ. இறையன்பிடம் பாராட்டிச் சொல்லியிருக்கிறார். 'கலைஞரின் ஓவியங்களை கலைஞரே பார்த்தால்தான் பரணிக்குப் பெருமை' என்று தலைமைச் செயலகத்திலேயே கண்காட்சி வைக்க ஏற்பாடு செய்து தந்தாராம், வெ. இறையன்பு.

''கிட்டத்தட்ட இருபது படங்கள்



* ராஜபரணி

# கறுப்புக் கண்ணாடி மஞ்சள் நெற்றி!




கண்காட்சியில் வைக்கப்பட்டிருந்தன. கலைஞர் ஒவ்வொரு படத்துக்கு முன்பும் நின்று, ரசித்து கமெண்ட் அடித்தார். மஞ்சள் துண்டை மனத்தில் கொண்டு நான் எல்லா ஓவியங்களுக்கும் மஞ்சள் நிற பின்னணி கொடுத்திருந்தேன். அதைக் கவனித்த கலைஞர், உழவர் சந்தைக்குப் பச்சை நிறம் தந்திருந்தால் இன்னும் பொருத்தமாக இருந்திருக்குமே!' என்று சொன்னார்.



"அவரது தாயார் அஞ்சுகம் அம்மையாரை வரைந்து அருகிலேயே ஒரு பேனாக் குழந்தை தொட்டிலில் இருப்பது போல கலைஞரை உருவகப்படுத்தியிருந்தேன்.

'நல்ல கற்பனை... இதைப் பெரிய அளவில் தயாரித்து வீட்டுக்குக் கொண்டு வாங்க' என்று சொல்லியதோடு, எவ்வளவு பெரிய சைஸ் என்பதைக் கையாலேயே காற்றில் வரைந்து காட்டினார்." என்று பூரிக்கிறார் பரணி.




அப்பா ஒரே ஒரு படம் கேட்டார் என்றால், மகன் மு.க. ஸ்டாலின் இன்னும் ஒரு படி மேலே போய், திராவிடப் பாரம்பரியத்தில் வந்த முக்கிய தலைவர்களை ஓவியமாக வரைந்து தரும்படி கேட்டிருக்கிறார். பெரியார், அண்ணா, என்.எஸ்.கே. பாரதிதாசன் என நாற்பது திராவிடப் பெரும் தலைவர்கள் ஓவியங்கள் கண்காட்சிக்குத் தயார். கலைஞரின் தேதிக்காக காத்திருக்கிறாராம்.

ராஜபரணியின் தூரிகைக் கவிதைகளை ரசித்த நடிகர் பார்த்திபன், தம்முடைய 'சோத்துக்கட்சி' 'ஏலேலோ' படங்களுக்கு ஆர்ட்டிபிரிவில் உதவும்படி நட்புடன் அழைத்திருக்கிறார்.

- அனு

படங்கள் : யோகா

# நாதஸ்வர கிருஷ்ணன்!

**சமீபத்தில் காலமான நாதஸ்வர இசை மேதை நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் பற்றி அவரது மருமகனும், சென்னைத் தொலைக்காட்சி நிலைய முன்னாள் இயக்குனருமான ஏ. நடராஜன் நினைவுகூர்கிறார் :**

♦ 1993 நவம்பர் மாதம் 2-ம் தேதி சென்னை காமராஜர் அரங்கில் இளைய ராஜாவுக்கு நடைபெற்ற பாராட்டு விழாவில் வாசித்ததுதான் கடைசி கச்சேரி. மறுநாள் 'ஸ்ட்ரோக்' வந்து வலது கையை இயக்க முடியாமல் போய் விட்டது.

♦ அந்த வருடம் அக்டோபர் மாதத்தில் அவர் ரொம்பவும் தன்னை வருத்திக் கொண்டார். அந்த அளவுக்கு நிகழ்ச்சிகள் குவிந்திருந்தன. திருப்பதியில் பிரமோற்சவத்தில் தினமும் மாலை ஆறு மணி முதல் நள்ளிரவு 12 மணி வரை வாசித்தாக வேண்டும். பெங்களூரில் ஒரு பெரும் செல்வந்தர் வீட்டுக் கல்யாணம். ஏற்கெனவே அவரது வீட்டில் நான்கு கல்யாணங்களுக்கும் இவர்தான் வாசித்தார். அது ஐந்தாவது கல்யாணம். கடைசி கல்யாணம். 'நீங்கள்தான் வந்து வாசிக்க வேண்டும்' என்று வற்புறுத்தினார்கள். 'எவ்வளவு பணம் கேட்டாலும் தருகிறோம்' என்றார்கள். மாமா வேடிக்கையாக 'ஒரு லட்சம் தருவீர்களா?' என்று கேட்க உடனே லட்சம் ரூபாயைக் கொடுத்து விட்டார்கள். இவர் மீது அவ்வளவு அன்பு! திருப்பதி உற்சவத்துக்கிடையே பெங்களூர் போய் வாசித்து விட்டு வந்தார். ஹைதராபாத், மும்பை



• கிருஷ்ணன்

என்று அந்த அக்டோபரில் ஏகமாய்க் கச்சேரிகள். ரத்த அழுத்தம் அதிகமாகி விட்டது. ஆனால் அதைக் கவனிக்காமல் விட்டுவிட்டார். நவம்பர் மாதம் முதல் தேதி சேலத்தில் அவரது ஆடிட்டர் வீட்டுத் திருமணத்தில் வாசித்தார். அப்போது இருந்த மத்திய அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலம்தான் மாமாவுக்கு மாலையிட்டு மரியாதை செய்தார்.

♦ மூன்று மகன்கள். மூன்று மகள்கள். அனைவருக்கும் சங்கீத ஆர்வம் உண்டு. ஆனால் நாதஸ்வரத்தை யாரும் தொழிலாக எடுத்துக் கொள்ளவில்லை.

♦ வாலிபால் என்றால் மாமாவுக்குப் பிடிக்கும். கிரிக்கெட் என்றால் உயிர். டெஸ்ட் மேட்ச்களின்போது தவறாமல் டீவியிலோ, நேரிலோ பார்த்து ரசிப்பார். 1983ல் லண்டன் போயிருந்தபோது லார்ட்ஸ் மைதானத்தில் இந்தியா விளையாடிய மேட்ச். அன்று பார்த்து அவருக்கு லண்டன் பிபிசி தமிழோசையில் ஒலிப்பதிவு இருந்தது. சங்கரமூர்த்தி தான் தயாரிப்பாளர். "சீக்கிரம் ஒலிப்பதிவை முடித்துக் கொள்ளுங்கள். நான் லார்ட்ஸ் போய் மேட்ச் பார்க்கணும்" என்று பிபிசியிடம் வற்புறுத்தி ஒலிப்பதிவை முடித்துக் கொண்டு, மேட்ச் பார்த்து விட்டு அதில் நாம் வெற்றி பெற்றதும் சென்னையில் தம் உற்றார் உறவினர்களுக்கு அங்கிருந்து ஃபோன் செய்து 'நாம ஜெயிச்சுட்டோம்' என்று சின்னக் குழந்தை போல குதூகலித்துச் சொன்னார்.



♦ பாரதியார், பாரதிதாசன் பிடிக்கும். பாரதிதாசனோடு பழகியும் இருக்கிறார். 'பெருங்குழல் புலவர் மணி' என்று ஒரு விருதையும் புரட்சிக் கவிஞர் மாமாவுக்கு வழங்கியிருக்கிறார்.

♦ இவரது இசையுடன்தான் சென்னை தொலைக் காட்சி நிலையம் செயல்படத் தொடங்கியது. அதே போல சென்னையில் நேரு உள் விளையாட்டு அரங்கம் திறக்கப்பட்ட போதும் மாமாதான் வாசித்தார். இப்படி நிறைய பெருமை கள் உண்டு அவருக்கு.

♦ தம் குருவின் மீது அளவற்ற பக்தி உண்டு. அருப்புக் கோட்டை கணேசன்தான் அவரது குரு. தமது ஊரில் பெரிய வீடு கட்டியபோது அவர் வீட்டுக்கு வைத்த பெயர் : 'குருநாதர் இல்லம்'.

♦ புதிய புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில் தீராத ஆர்வம் இருந்தது. வெளிநாடுகளுக்கு நான் பலமுறை அவரோடு போனதுண்டு. சின்னச் சின்ன விஷயங்களுக்குக் கூட விளக்கம் கேட்டுத் தெரிந்து கொள்வார். அவர் கேட்பாரே என்பதற்காகவே நான் முன்கூட்டியே அவற்றைப் பற்றி விரிவாகத் தெரிந்து வைத்துக் கொள்வேன்.

♦ இலக்கியத்தில் ஆர்வம் மிகக் கொண்டவர். நல்ல எழுத்துக்களைத் தேடிப் போய்ப் படிப்பார். கலைஞரின் கவிதை, உரை நடைகளைப் படித்து மகிழ்வார். சாவி அவர்களின் நகைச்சுவை எழுத்துக்கு மாமா பரம ரசிகர். அதே போல திருக்குறள் முனுசாமியின் பேச்சுக்களை ரசிப்பார்.

♦ 'சென்ட்' பிரியர். சென்னை கந்தசாமி கோயிலுக்கு அருகே ஒரு குறிப்பிட்ட கடையில்தான் தமக்குப் பிரியமான வாசனைத் திரவியங்களை வாங்கிப் பயன்படுத்துவார். சில சமயம் ஃபிரான்ஸிலிருந்து பாரீஸ் சென்ட் வகைகளை விரும்பி வாங்குவார்.

♦ வெளிநாடுகளில் நிகழ்ச்சி முடிந்தவுடன் ஊர் திரும்பும்போது யார் யாருக்கு என்னென்ன வாங்கிப் போக வேண்டும் என்று ஒரு பட்டியல் போடுவார். தமக்கென்று எதுவும் அதில் இருக்காது!

**— ராணிமைந்தன்**

# தனிக்குடித்தனம்

புது வீட்டில்
உறக்கம் பிடிக்கவில்லை...

மனைவியின்
குறட்டைச் சத்தம்
நிசப்தத்தை இம்சிக்கிறது.

எங்கோ
தாயைத் தேடும்
பூனைக்குட்டியின் பரிதாபம்!

சூரியனைப் புதைத்துவிடும்
சுவர்க்கோழிகளின்
ரீங்காரத்தினூடே
கேட்கிறது
ஜோடிப்பல்லிகளின் டூயட்.

விடியும்வரை
விழித்திருக்கப்போகும்
என்னுடன்
பூஜ்ஜிய விளக்கு!

குடும்பச்சிக்கலில்
அறுந்துவிழுந்த நூலாய்
நான் கிடக்க...

அங்கு
அம்மாவும்
விழித்திருக்கக்கூடுமோ?

உப்புக்கரிக்கும்
இரவுகளுக்குத் தெரியும்
என் அழுகையின் வீரியம்!

தஞ்சை ராகவ், மகேஷ்

# கறுப்பு தாஜ்மஹால்

வசுந்த்ரா தாஸின் லேட்டஸ்ட் வீடியோ ஆல்பம் 'மேரி ஜான்' எம்.டி.வியில் 'மோஸ்ட் வான்டட்' லிஸ்டில் அடிக்கடி இடம் பெறுவது குறித்து, பிரபல பாப் பாடகிகளெல்லாம் 37 செல்சியஸ் டிகிரி பொறாமை அனலில் வெந்து தவிப்பதாகக் கேள்வி.

'போன மாதம் லிட்டில் ஜான்... இப்ப மேரிஜான்... டபுள் டெக்கர் சந்தோஷமா?'' என்றால் சிம்பிளாகச் சிரிக்கிறார்.

'ஜாம்ட்ரீ', 'ரிவர்' என்று இரண்டுவிதமான இசைக் குழுவில் இருந்ததால் வசுந்த்ராவுக்கு பாப், ஃப்யூஷன், ராக், பாப் என சகலவிதமாகவும் அசத்த முடிகிறது. ரிகார்டிங்குக்காக சென்னை வந்தவருக்கு மேக்னா சவுண்ட் நிறுவன ஆட்களுடன் அறிமுகம் ஏற்பட, 'லிட்டில் ஜான்' பட இசையமைப்பாளர் ப்ரவீண்மணியும் அவருடைய நண்பரான பியூஷ் மிஷ்ராவும் சிநேகமாக, 'மேரி ஜான்' இசை ஆல்பம் மின்னல் போல உருவாகிவிட்டதாம்.

ஷொத் அலி என்பவர் மணிரத்னத்தின் உதவியாளராக இருந்தவர். அவர் சொன்ன புதுமையான கதைதான் ஆல்பத்துக்கு இன்ஸ்பிரேஷன்.

தாஜ்மகாலை டிசைன் செய்த கட்



டடக் கலைஞரின் கண்கள் பிடுங்கப்படுகின்றன. அவர் தன்னுடைய சோகத்துக்கெல்லாம் சாட்சி சொல்வதுபோல கறுப்பு நிறத்தில் இன்னொரு தாஜ்மகாலைக் கட்ட தீர்மானிக்கிறார். தாஜ்மகாலுக்கு ஓர் அழகிய காதலி மும்தாஜ் இருந்தது போல தன்னுடைய கறுப்பு தாஜ்மகாலுக்கு ஒரு காதலி கிடைப்பாளா என அவர் தேடும்போது, வசுந்தரா கிடைக்கிறார். இது 'மேரிஜான்' கதை.

இந்த ஆல்பத்தில் சுக்வீந்தர்சிங்கும் பங்கேற்று 'சோனி, சோனி', 'மேரா மெஹ்பூப்' என இரண்டு பாடல்களைப் பாடியிருக்கிறார்.

"சொன்னால் நம்ப மாட்டீங்க... சுக்வீந்தர்சிங் இந்த பாப் ஆல்பத்தில் பாடியதுகூட மிக மிகத் தற்செயல்தான். 'மலையாளம் சினி அவார்டு கலைநிகழ்ச்சிக்காக துபாய் போயிருந்த நான் அங்கேதான் சுக்விந்தர் சிங்கைச் சந்தித்தேன். ஒருநாள் உணவுவேளையின்போது, நான் 'மேரி ஜான்' ஆல்பம் பற்றி அவரிடம் சொன்னேன். உடனே அவரும் உற்சாகமாகி 'நானும் ஒன்றிரண்டு பாடல்கள் கம்போஸ் பண்ணித் தரட்டுமா?' என்று கேட்டார். நான் தலையாட்டி சம்மதித்த அடுத்த ஐந்தாவது நிமிடம் டைனிங் டேபிள் மீதே தாளம் போட்டு 'சோனி... சோனி'' பாட ஆரம்பித்து விட்டார். நான் உடனே டிக்டாஃபோன் எடுத்துப் பதிவு செய்துகொண்டேன். கலை நிகழ்ச்சி முடிந்ததும் மும்பைக்குப் பறந்து வந்து, உடனே ரிகார்டிங் வேலைகளில் இறங்கி விட்டோம். 'மேரி ஜான்' சூப்பர் ஹிட் ஆனதுக்குக் காரணம் எங்கள் டீம் ஸ்பிரிட்தான்'' என்று மனப்பூர்வமாகச் சொல்கிறார் வசுந்த்ரா.

சரி, நீங்கள் எதில் பெட்டர்? நடிப்பிலா... பாட்டிலா...?

"நீங்கள் இரண்டு மாதத்துக்கு முன்பு இப்படியொரு கேள்வி கேட்டிருந்தால் 'என்ன சந்தேகம்? பாட்டுதான்' என்று நான் உங்கள் மீது பாய்ந்திருப்பேன். இப்போ என் கையில் மூன்று படங்கள் இருப்பதால என்னால் தீர்மானமாகச் சொல்ல முடியலை. மீரா நாயரின் 'மான்சூன் வெட்டிங்' படத்தில் பஞ்சாபிப் பெண்ணாக நடிக்கிறேன். 'ஆக்ஸ்' 'லகான்', 'மித்ர்,' 'லிட்டில் ஜான் (லைலா... பாடப் போறேன், ஸ்டைலா) என பாடிக் கொண்டுமிருக்கிறேன். நீங்க சொல்லுங்க நான் எதில் பெட்டர்? என்று நம்மையே திருப்பிக் கேட்கிறார்.

— ஆர். லலிதா



**"மோப்ப நாயால ஏதோ கலாட்டாவாயிடிச்சாமே...?"**

**"திருட்டுப் போன இடத்துலேருந்து நேரா எஸ்.ஐ. வீட்டுக்குப் போனா குழப்பம் வரத்தானே செய்யும்!"**

**— சீர்காழி வி. ரேவதி**

**காவல் சிரிப்பு!**

ஸ்ரீரங்கத்துக்கு அருகிலே ஒரு க்ஷேத்திரம். குணசீலம் என்று பெயர். அதிலே பார்த்தால் எம்பெருமான் கையிலே மந்திரக்கோலுடன் காட்சி தருகிறான்.

குணசீலம் க்ஷேத்திரத்துக்கு மன வியாகூலங்களுடன் போகிறவர்களெல்லாம் அவன் மந்திரக் கோலால் அவ்வியாகூலங்கள் நீக்கப் பெற்றது போல் குணமாகித் திரும்புகிறார்கள்.

'தேசிகோ மந்திரவாதி!' என்று லக்ஷ்மி சஹஸ்ரத்திலே அவனை அழைத்திருப்பதைக் கவனிக்க வேண்டும். ஆசார்யர்களிலே மந்திரவாதி அவன். எல்லா மந்திரங்களையும் நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறவன்.

மந்திரங்களைத் தெரிந்து வைத்துக் கொண்டு பல மந்திரவாதிகள் துஷ்



# குறையொன்

பிரயோகம் பண்ணுகிறார்கள். ஆனால் உயர்ந்த ஆசார்யர்கள், அந்த மந்திரங்களைத் தெரிந்து வைத்துக் கொண்டு அவனை நமக்குக் காட்டிக் கொடுக்கிறார்கள்.

நாமெல்லாரும் இப்போது மந்திரக் கோலைக் கையிலே வைத்துக் கொள்ள வேண்டும். என்ன மந்திரக்கோல்...? 'நம:' என்ற சப்தம்தான் அந்த மந்திரக்கோல்.

'நம:' என்று சொல்லி விட்டோமானால் அதோடு நீர்ப்பண்டமாய் உருகிப் போய் விடுவான் பரமாத்மா. என்ன கொடுப்பது என்று தெரியாமல் தடுமாறி நிற்பான். நாம் நம : சொல்லி விட்டோமானால் அவ்வளவு சந்தோஷம்! அந்த நமகத்தைப் பாராயணம் பண்ணினோமானால் வைகுண்ட வாஸமே வேண்டாம் என்று தோன்றிவிடும்! 'நம:' என்கிற சொல் இருக்கிறதே, அதற்கே பரமாத்மா ஓடி வந்து முன்னே நிற்கிறான் என்றால், நாம் கைகூப்பி கீழே விழுந்து சேவித்தால் அவன் கதி என்ன...? நடுநடுங்கிப் போய்விடுவான்! என்ன பண்ணுவது என்று அவனுக்குத் தெரியாமல் போய்விடும்.

அதனால்தான் எம்பெருமான் பாஷ்யகாரர் சொல்கிறார் : "அவனை வசீகரணம் பண்ண வேண்டுமானால், அவன் திருவடியிலே சரணாகதி பண்ண வேண்டும். சரணாகதி பண்ண வேண்டுமானால் ஒரு மந்திரம் உண்டு அல்லவா...? நம: நம: என்கிற மந்திரம் தான் சரணாகதி மந்திரம்."

ஓம் விஷ்ணவே நம : என்று விஷ்ணு சப்தத்தையும் சேர்த்துச் சொல்லும்படி கூறுகிறார் பீஷ்மாச்சார்யார்.

'ஓம்' என்றும் 'நம': என்றும் சேரும் போது நாமங்களெல்லாமே மந்திரங்களாகின்றன. ஆகையினாலே ஸஹஸ்ரநாமம் மொத்தமும் மந்திரங்கள்தான்; வெறும் நாமங்கள் அல்ல; பெயர்கள் அல்ல. மந்திர சாஸ்திரம் என்பதை நாம் உணர வேண்டும்.

அவற்றுள்ளே விஷ்ணு சப்தமானது வேதத்திலே எங்கும் பிரசித்தமாய், நாராயணனை நமக்குக் காட்டிக் கொடுக்கக்கூடிய உயர்ந்த சொல்லாய் அமைந்திருக்கிறது.

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

12

யக்ஞ - யாகாதிகளிலே எங்கே பார்த்தாலும் விஷ்ணு சப்தம்தான்.

முதல் நாள் ராத்திரியே பாலைக் கறந்து வைத்து, சாயங்காலம் தயிராக்குகிறோம். அதை யக்ஞத்தில் சமர்ப்பிக்கிறோம்.

வேதம், இந்த சமர்ப்பணம் குறித்துப் பல விஷயங்களை நமக்குச் சொல்லித் தருகிறது:

சாயங்கால வேளையிலே, பசுக்களெல்லாம் மேய்ந்துவிட்டு வருகிற காலம் இருக்கிறதே... அந்த நேரத்தை மனசால் நினைக்க வேண்டும் என்கிறது. கோதூளி காலம் என்று அதற்குப் பெயர்.

அந்தப் பசுக்களுக்குப் பின்னால் அப்போது நாமும் வர வேண்டும். பிராதஹ் காலம் அவை புறப்பட்டுப் போகிறபோதும் அவற்றின் பின்னால் நாம் போக வேண்டும். அந்த வேளையிலே பசுவின் குளம்பிலேயிருந்து நம் மேலே படும்படியான தூசி இருக்கிறதே, அது பரம பவித்ரமானது.

இன்னொரு இடத்திலே வேதம் சொல்கிறபோது கோஷ்டம் என்பதைக் குறிப்பிடுகிறது.

பசுக்கள் கட்டப்பட்டிருக்கும்படியான இடத்துக்குக் கோஷ்டம் என்று பெயர். 'கொட்டகை' என்று நாம் சொல்கிறோம்.

அந்த இடத்திலே எந்த சத்கர்மாவானாலும் பண்ணலாம்; புண்யாகவசனம் பண்ண வேண்டியதில்லை. மீதி எந்த இடத்திலே பண்ணினாலும் புண்யாகவசனம் பண்ண வேண்டும் - அந்த இடத்துக்குச் சுத்தி ஏற்படும்படியாகப் பண்ண வேண்டும். ஆனால், பசுக்கள் கட்டப்பட்டிருக்கும்படியான இடத்துக்குப் புண்ணியாகவசனம் வேண்டியதில்லை.

ஆகையினாலேதான் 'கோஷ்டம் உயர்ந்தது' என்று கொண்டாடுகிறது வேதம்.

# ருமில்லை



இப்படிப்பட்ட உயர்வைத் தரும் பசுக்களெல்லாம் சாயங்காலம் திரும்பி வருகின்றன. கன்றுக்குட்டிகள் துள்ளி ஓடி வருகின்றன.

இந்தப் பசுக்களை நாம் எப்படி ரக்ஷிக்க வேண்டும் என்பதையும் வேதம் இன்னொரு இடத்திலே சொல்கிறது: ஒரு பசு கன்று போட்டால், பத்து நாட்கள் இரண்டும் ஒரே இடத்திலே சேர்ந்து இருக்க வேண்டும். இந்த பத்து நாட்களும் பசுவைக் கறக்கக் கூடாது. பத்து நாட்களுக்குப் பிறகும், கறப்பதற்கு முன் கன்றுக் குட்டிக்கு நிறைய கொடுத்து விட்டுத்தான்

நாம் கறந்து கொள்ள வேண்டும். அப்புறம் போகப் போகத்தான் நாம் நிறைய கறந்து கொள்ளலாம்.

பசுக்கள், வேதத்திலே சொல்லத்தகாத பிராணிகளாக, சேவிக்கத் தகுந்த பிராணிகளாக உயர்த்திச் சொல்லப்படுகின்றன.

அப்படிப்பட்ட பசுக்கள் மேய்ந்து விட்டு வருகின்றன. அவற்றின் பாலைக் கறந்து, தோய்த்து வைக்கிறோம். தயிராக அது பரிணமிக்கிறது. மறுநாள் பிராதஹ் காலம் அதை பகவானுக்கு விநியோகிக்கிறோம்.

கோயிலானால், பரமாத்மா விக்ரஹ ரூபியாக எழுந்தருளியிருக்கிறான். நிவேதனம் பண்ணுகிறோம். அதே மாதிரி, கிரஹத்திலேயும் பண்ணுகிறோம்.

இதைக் காட்டிலும் உயர்ந்த நிவேதனம் ஏதேனும் உண்டா? என்றால், யக்ஞத்திலே ஜொலிக்கும்படியான, அக்னியிலே சேர்க்கும்படியான ஹவிஸ் இருக்கிறதே, அது மிகவும் உயர்ந்தது. பகவான் அதை நேரே சுவீகரிக்கிறான். அதனால்தான் யக்ஞமானது உயர்ந்த கர்மாவாகக் கொண்டாடப் படுகிறது.

ஏகப்பட்ட திரவியங்கள் யக்ஞத்திலே பொரி, தேன், பால், தயிர், புரோடாசம், சோமரஸம் – இப்படிப் பல திரவியங்கள் பற்றியும் நல்ல ஞானம் வேண்டும். அந்தந்த திரவியங்களுக்குண்டான அதிஷ்டான தேவதைகள் இருக்கின்றன. அந்த யக்ஞத்துக்கு யார் பலனைக் கொடுக்கிறார்கள் என்ற ஞானம் நமக்கு இருக்க வேண்டும்.

சொல்லப்படுகிற மந்திரத்தை எந்த ரிஷிகள் வார்த்தார்கள்? மந்திரத்துக்குரிய ரிஷி யார் என்று தெரிந்து கொள்ள வேண்டும். அது எந்த சந்தஸ்ஸில் இருக்கிறது என்கிற ஞானம் வேண்டும். எந்த யக்ஞத்திலே அதை விநியோகம் பண்ணலாம் என்று உரிய யக்ஞத்தைப் பற்றிய ஞானமும் வேண்டும். திரவிய ஞானமும் வேண்டும்; அதில் ஆராதிக்கப்படுகிற தேவதையினுடைய பெருமையையும் நாம் உணர வேண்டும்.

இவ்வளவு ஞானம் உள்ளவனாயிருந்தாலும் அவன் என்ன சொல்கிறான்? அந்த வேத மந்திரம் என்ன சொல்ல வைக்கிறது அவனை என்று பாருங்கள்.... வேதம் "ஹே விஷ்ணு!" என்று கூப்பிடுகிறது. "நேற்று இரவு பாலைக் கறந்து தயிராக்கி வைத்திருக்கிறேன். அந்தத் தயிர் இப்போது ஹோமத்திலே விநியோகமாகப் போகிறது. ஹோம திரவியமாக நீ சுவீகரிக்கும்படியாக அதை ரக்ஷிக்க வேண்டும். உனக்கு விநியோகமாக வேண்டிய அந்த திரவியத்தை நீதான் ரக்ஷித்துக் கொடுக்க வேண்டும். நீ அதை ரக்ஷித்து ஏற்று எங்களுக்கு அனுக்கிரஹம் பண்ண வேண்டும்..." என்று பிரார்த்திக்கிறது.

## அருள்வாக்கு

**வா**யால் 'நாராயண' என்று சொன்னால் அது நாராயண 'வசனம்'தான்; 'ஸ்மரணம்' இல்லை. ஸ்மரணம் என்றால் மனஸால் நினைப்பது, நன்றாக நினைப்பது. வெறுமே

கர்ம காண்டத்திலே, இந்த மாதிரி ஹவிஸ் என்று எடுத்து வைத்து, அவனுக்காக அது என்று உணர்ந்து அவனையே அதை ரக்ஷிக்கும்படியாகப் பிரார்த்திக்கிற மந்திரம்... இதையே பிரும்ம காண்டத்திலே – ஞான காண்டத்திலே, உபநிஷத்திலே பார்த்தோமானால்... 'ஆத்மா என்கிற ஹவிஸ் அவனுடைய திருவடியிலே விநியோகமாக வேண்டும். இந்த ஆத்மா அனர்த்தப்படாதபடி, கெட்டுப்போகாதபடி, வீணான விஷயத்தில் ஈடுபடாதபடி அந்த எம்பெருமான் இதை ஏற்க வேண்டும். அவனே இதற்கு ரக்ஷகனானதனாலே... 'ஹே பிரபு! விஷ்ணு! இந்த ஆத்மாவாகிற ஹவிஸை நீ உவக்கும்படியாக நீயே ஏற்றுக்கொள்...' என்று பிரார்த்திக்கிறது.

இன்னொரு இடத்திலே உபநிஷத் சொல்கிறபோது, 'எவனை பகவான் விரும்புகிறானோ அவனால் அவன் அடையப்படுகிறான்...' என்றது.

பகவானால் விரும்பப்பட்டவனால் அடையப்படுகிறான் பரமாத்மா என்று அர்த்தம் இதற்கு!

எவனை பகவான் விரும்புகிறான்...?

அதை உபநிஷத் சொல்லவில்லை!

யாரை அவன் விரும்புகிறான் என்று நாம் பார்த்தோமானால், அவனை யார் விரும்புகிறார்களோ, அவர்களையே அவன் விரும்புகிறான்! அவர்களிடத்திலேதான் பகவானுக்கு வியாமோகம்.

அதனால்தான் 'அகலில் அகலும், அணுகில் அணுகும்...' என்றார் ஆழ்வார். நாம் இரண்டு அடி தள்ளிப் போகிறோம். பகவானை விட்டுத் தள்ளிப் போகிறோம்... அவனும் தள்ளியே போய் ஒதுங்கியே நிற்பான்; வரமாட்டான் கிட்டே.

இரண்டு அடி நெருங்கிப் போனாலோ...

வாயால் மட்டும் சொல்லி ப்ரயோஜனமில்லை. மனப்பூர்வமாக நினைத்துச் சொல்லணும். ஆனால் நடைமுறையில் என்ன ஆகிறதென்றால், ஒரு ஸ்தோத்ரம், மந்த்ரம் எதுவானாலும் ஸரி, அடிக்கடி ஒரு 'ரொடீனா'க்ச் சொல்கிறபோது வார்த்தையை மாத்திரம் சொல்வதாகத்தான் ஆகி விடுகிறது; அந்த வார்த்தைக்கு என்ன அர்த்தமோ அதை மனஸ் நினைக்காமல், மனஸ் அது பாட்டுக்கு எதெதையோ யோஜிப்பதாகவும் வாய்மட்டும் மொணமொண பண்ணுவதாகவும் ஆகி விடுகிறது! அப்படி இங்கேயும் நாராயணனை ஸ்மரிக்காமல் பேரை மாத்திரம் சொன்னால் மஹா தோஷமாகி விடும். மனுஷ்யாளுக்கு மனுஷ்யாள் மிஸப்ரோப்ரியேட் பண்ணுவதே குற்றமென்றால் பகவானுக்கானதை அப்படிப் பண்ணுவது மஹா பெரிய குற்றந்தானே? ஸதா காலமும் ஸர்வ ஜாக்ரதையாக இருந்தாலொழிய, ஒரு ஸந்நியாஸிக்குப் பல பேர் தினந்தினமும் நமஸ்காரம் பண்ணுகிறபோது அவன் 'நாராயண' சொல்வது ஒரு ரொடீனாகி விடுவதில் அவன் கூட இப்படிப்பட்ட அபராதத்திற்கு ஆளாகி விடக் கூடும்.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

அவன் பத்தடி நம்மிடம் நெருங்கி வருவான்! நாம் தூரப் போகிறபோது 'இவன் எங்கே போவான்... மறுபடியும் இங்குதானே வர வேண்டும்...' என்று விட்டு விடுவான்.

எங்கெங்கோ போய்ச் சுற்றிவிட்டு அந்த காகாசுரன் இறுதியில் ராகவனுடைய திருவடியிலே தானே வந்து விழுந்தது!

கர்ம காண்டம் நமக்கு அவனைக் காட்டிக் கொடுத்து ஆத்மாவாகிற ஹவிஸை சமர்ப்பிக்கக் கற்றுத் தருகிற போது அவனை அந்த தேவதையை, விஷ்ணு என்று குறிப்பிடுகிறது.

**வி**ச்வம் விஷ்ணு என்கிற சப்தங்களை எடுத்துக் கொண்டோமானால், விச்வம் எங்கெல்லாமே பறந்து கிடக்கிறது. அதிலே விஷயங்களையெல்லாம் ஆராய்ந்து மஹரிஷிகள் தபஸ் பண்ணிய இடம் இந்த பாரத தேசம்.

இந்த பாரத தேசத்துக்கு இருக்கும்படியான பெருமை மற்ற தேசங்களுக்குக் கிடையாது. கர்ம பூமி என்று இதற்குப் பெயர். தேவதைகளெல்லாம் கூட இங்கே வந்து யக்ஞம் பண்ணியதாகச் சொல்லியிருக்கிறது. இந்திராதி தேவதைகள் தங்கள் சக்தி குறையாமலிருக்க யக்ஞம் பண்ணலாம் என்று வேதம் சொல்கிறது. ஆனால் சுவர்க்கலோகத்திலே யக்ஞம் பண்ண முடியாது. பண்ணினால் பலன் ஏற்படாது. ஏனென்றால் சுவர்க்கம் போக பூமி. போகத்தை அனுபவிப்பதற்காக ஏற்பட்ட இடம். ஆகையினாலே தேவதைகள் யக்ஞம் பண்ண வேண்டுமானால் இறங்கி இங்கேதான் வரவேண்டும். பூலோகத்திலே எங்கே வரவேண்டும் என்று பார்த்தால் பாரத தேசத்துக்குத் தான் வரவேண்டும் - மற்ற இடங்களுக்கெல்லாம் திலகமாய் இருக்கக்கூடியது இது புண்ய பூமி என்று சொல்லப்படுகிறது. இந்த தேசம் மொத்தம் உயர்ந்த பாவனமான பாகவத அவதாரம், பகவத் அவதாரம், மஹரிஷிகளுடைய அவதாரம், இதிகாச புராணங்களுடைய அவதாரம்...

இந்தப் பூமியில் நாம் கர்மாவைப் பண்ணுவதற்கு - சர்வத்துக்கும் ஸ்தானபூதனாக விஷ்ணு விளங்குகிறான்.

நாமமாயிரம் ஏத்த நின்ற நாராயணன் நமக்காக அவதாரமெடுத்து வருகிறான்.

ஸ்தனஞ்சய பிரஜை என்றால் சின்னக் குழந்தை. அது தாயாரிடத்திலே பால் சாப்பிடுகிறது. தாயார் அபத்யம் பண்ணினால் குழந்தைக்குக் கெடுதல் ஏற்படும். அதற்காகத் தாயார் பத்யம் காக்கிறாள். குழந்தை பத்திரமாக வளர்கிறது.

அந்த மாதிரி, இந்த ஜீவராசிகளான நாமெல்லாம் பகவானுக்குக் குழந்தைகளானதனாலே, அந்தக் குழந்தைகளை ரக்ஷிப்பதற்காக பரமாத்மா வைகுண்டத்தை விட்டு விட்டு இறங்கி வந்து விட்டான்!

எங்கே வந்தான்...?

பதரிகாசிரமத்திலே நர நாராயண அவதாரம் பண்ணித் தபஸ் பண்ணுகிறான்!

(வளரும்)



# நடக்குமென்பார்

**மேஷம் :** தனியாகத் தேர்தல் களத்தைச் சந்தித்திருக்கும் ம.தி.மு.கவின் துணிச்சலைப் போல மேஷ ராசிக்காரர்களின் துணிச்சலும் இந்த வாரம் வெகுவாக வெளிப்படும். குடும்பத்துல இதுவரை நிலவி வந்த உஷ்ணக் காற்று, சட்டென்று மாறி கூல் ஹோமாகிடும். டாடா, அம்பானி ரேஞ்சுக்கு இல்லாவிட்டாலும், ஏதோ மனசுக்கு உற்சாகம் தரும் அளவுக்கு பணம் காசு புரளும். சுக்ரன் அசுர பலசாலியாகத் திகழ்வதால், சினிமா, நாட்டியம் கலைத் துறைச் சேர்ந்தவர்களுக்கு டைம் ரொம்ப நல்லா வர்க் அவுட் ஆகும். பதி-பத்னி இடையே ஃபெவி-பாண்ட் போடாமலேயே ஒற்றுமை நிலவும். உஷ்ண சம்பந்தமான பாதிப்பு ஏற்படலாம். உஷார்!

**ரிஷபம் :** பங்களாதேஷ் செய்துவரும் எல்லைப்பகுதி ஊடுருவல் போல, உங்கள் மனத்திலும் குழப்பம், சஞ்சலம் நைஸாக நுழைந்து நிம்மதியைக் குறைக்கும். பொருளாதார நிலை கூட பொரும வேண்டிய அளவில்தான் இருக்கும். அதுக்காக பெருமூச்சு விட்டுக்கிட்டு பேந்த பேந்த நிக்காதீங்க. புதிய முயற்சிகள் எதுவும் செய்யாம, கடினமா உழைச்சாலே பாதி பிரச்னை ராஜதானி எக்ஸ்பிரஸ் ஏறி ஓடியேப் போயிடும். பெண்களைப் பொருத்தவரை, ஆடை, அணிமணி, வாசனை திரவியம்னு புதுசா வந்து சேரும். அப்புறம் குஷிக்கென்ன பஞ்சம்? கோர்ட்டு வழக்கு விவகாரங்கள் அனுகூலம் கொண்டு வராது. அதனால நிதானம் தேவை. வீட்டுல இருக்குற பெரிசுகளின் ஆலோசனையைக் காதுல வாங்கிட்டு நடங்க.

**மிதுனம் :** வீட்டுக்கு விருந்தாளிகள் வரும் சமயத்தில் கரெக்டாக 'டிமிக்கி' கொடுக்கும் வேலைக்காரி போல, உங்கள் கிரக சஞ்சாரமும் சொதப்பி வைத்திருக்கிறது. இதனால் தேக ஆரோக்கியம், அந்தஸ்து, செல்வாக்கு, புகழ், வாழ்க்கை வசதிகள், இத்யாதி... இத்யாதி... மிக சாதாரணமாகவே இருக்கும். ஆனால் ஒரு விஷயத்தில் 'காலர்' தூக்கி விட்டுக் கொள்ளலாம். 11-ல் உலவும் சூரியன் நட்புடன் கைகுலுக்குவதால் பெரிய நஷ்டத்துக்கு ஆளாகாமல் லாஸ்ட் மினிட்ல கழண்டுக்கலாம். வாழ்க்கைத் துணையால் பிரச்னை, பண நடமாட்டம் குறைவு, கைப்பொருள் இழப்புன்னு இந்த வாரம் பேஜாராகத்தான் இருக்கும். தெய்வப் பிரார்த்தனை ஆறுதல் தரும்.

**கடகம் :** அதிசய தாயத்து, ரசமணி மோதிரம்னு எதுவும் போட்டுக்காமலேயே, உங்களுக்கு அதிர்ஷ்டம் அடிக்கப் போகுது. வெற்றி வாய்ப்புகள் வீடு தேடி வந்து 'காலிங்பெல்' அழுத்தி அழைக்கும். எதிரிகள் மறைந்து போவார்கள். அரசியல்வாதிகளுக்கு ஆதாயமான நேரம். அள்ளிக் கட்டலாம். மாணவர்களின் புத்திசாலித்தனம் ஃபோகஸ் லைட்டு போட்டது மாதிரி தனியா தெரியும்.

**சிம்மம் :** ராசிநாதனான சூரியன் 9ல் உச்சபலம் பெற்று, கும்பமேளா சாமியார் போல ஃப்ரீயாக உலவி வருவதால், உங்கள் ஆற்றல் ஆஹா ஓஹோன்னு இருக்கும். முக்கியப் பதவிகள், பொறுப்புகள்னு வந்து சேரும். குடும்பத்துல உற்சாகம் அலைபாயும். கவலைகள் கரை சேரும். எதிரிகள் கள்ளத் தோணி ஏறி ஓடியே போயிடுவாங்க. மாணவர்களின் அறிவும் திறமையும் கலங்கரை விளக்கம் போல பிரகாசிக்கும். மனசுல மகிழ்ச்சி மெரீனா பீச் கீழ்க்காற்று போல சுகமா வீசும்.

**கன்னி :** நாதஸ்வரக்காரங்களுக்கு அட்வான்ஸ் கொடுத்து வைங்க... திடீர்னு சுப காரியங்கள் நடக்கும் வாய்ப்பிருக்கு! அரசு விவகாரங்கள், புதிய திருப்பங்கள் தரும். பாராளுமன்றத்தில் எந்த விவகாரமும் கிளம்பாமல், ரயில்வே பட்ஜெட் நிறைவேறியது போல, உங்களுடைய நீண்ட நாள் ஆசைகளும் நிறைவேறப் போகுது. பெயர், புகழ் அதிகரிக்கும். பிரயாணம், விளையாட்டு விநோதங்களில் சிறு விபத்து ஏற்படலாம். உஷார்!

**துலாம் :** அட்மிஷன் – டொனேஷன் உறவு போல, இந்த ராசிக்காரர்களின் வாழ்க்கைத் துணை உறவும் சீராக இருந்து வரும்! சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களின் வாழ்வில் மும்மாரி



பொழியப் போகிறது. பெண்கள் புது முயற்சிகள் செய்யக் கூடாது. மக்களால் மன நிம்மதி கெடும். வெளிநாட்டுத் தொடர்பால் ரொம்ப நல்ல பலன் கிடைக்கும் எனலாம். கனவுக் குடிசைக் கூட கட்டாதீங்க.

**விருச்சிகம்** : உங்கள் புத்திசாலித் தனமும் திறமையும் 'விம் டிஷ்பார்' போட்டுத் துலக்கியதைப் போல பளிச்சிடும். அரசியல்வாதிகளின் ஆதிக்கம் உயரும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். கூட்டுத் தொழிலில் சட்டைப்பை நிரம்பும். நண்பர்கள் போட்டிப் போட்டுக் கொண்டு உதவி செய்வார்கள். வேலையில்லாமல் சிரமப்பட்டுக் கொண்டிருப்பவர்களுக்கு, எதிர்பார்த்த துறையில் சான்ஸ் அடிக்கும். யாராவது புது ஆட்களைப் பார்த்தா, அந்தத் திசைக்கே கும்பிடு போட்டுடுங்க.

**தனுசு** : அமெரிக்கத் தூத

# நடக்கும்!



ரக வாசலில் விசா வரம் வேண்டி தவம் கிடப்பவர்களைப் போல, நீங்களும் 'நல்லது நடக்காதா?' என்று ஏங்கிக் கிடந்தீர்கள் அல்லவா? இதோ வந்தாச்சு 'பொற்கால ஆட்சி'.... வியாபாரிகள் வளர்ச்சி பெறுவார்கள். கலைத்துறை சம்பந்தப்பட்டவர்களுக்கு அடிக்குது யோகம். அரசுப்பணியாளர்களின் அந்தஸ்து மாஞ்சா போட்டா காத்தாடி கணக்கா உயரப் போகுது. மாணவர்களுக்கு உற்சாகமான வாரம். கணவன்–மனைவி உறவில் தொகுதி வேட்பாளர் பேச்சு போல திடீர்ப் பாசம் பொங்கும்.

**மகரம்** : கையில கொஞ்சம் சில்லறை சப்தம் போட்டா, ஒழுங்கா முதலீடு செய்ய முயற்சி பண்ணிப் பாருங்களேன். நிச்சயம் அதிர்ஷ்டம் 'கூப்பிட்டாயா மகனே!'னு காட்சி தரும். அரசு விவகாரங்கள் கூட அனுகூலம் தரும். தெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். திருப்பதி சாமியின் டோக்கன் தரிசனம் கூட 36 மணி நேரத்தில் கிடைத்துவிடும்! வியாபாரிகள் நலம் பெறுவார்கள். பொருளாதாரம் திருப்தியாக இருக்கும். 'வாண்டட்' காலம் பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்கு இண்டர்வ்யூ, வேலைவாய்ப்பு வீடு தேடி வரும். உடன் பிறந்தவர்களால் மன அமைதி இந்திய நாணய மதிப்பு போல குறையலாம். கவனம் தேவை.

**கும்பம்** : பேச்சுல இனிமை, முகத்துல வசீகரம், எண்ணங்கள்ல புதுமை, செயல்ல சுறுசுறுப்பு... இதுதாங்க உங்களோட புது காஸ்ட்யூம். அரசியல்வாதிகளுக்கு உயர்பதவி, ஜரிகை மாலை வரவேற்பு, இத்யாதி... இத்யாதி கிடைக்கப்போகுது. அனுபவியுங்க. மனை, நிலம், வீடு, ரியல் எஸ்டேட், வாகனம் சேர்க்கையோ, அல்லது ஆதாயமோ கண்டிப்பா கிடைக்கும். துணிச்சலா 'ரிஸ்க்' எடுத்துப் பாருங்க. பெண்களுக்கு மகிழ்ச்சி பெருகும். எண்ணியபடி எல்லாம் இனிதே நடக்கும். ரேஷனில் எடை சரியாய்ச் சர்க்கரை கிடைத்தது போல குடும்ப நலம் சந்தோஷமாக இருக்கும்.

**மீனராசிக்காரப் பெண்கள் அரசியலில் இருந்தால் வெற்றிச் சிகரம் எட்டுவார்கள்.**

**மீனம்** : திருவாளர் சுக்கிரன் 'பூஸ்ட்' குடிச்சவர் மாதிரி எனர்ஜியோட உலவறதனால, உங்கள் தோற்றத்துல மாதவனின் மார்க்கெட் போல ஸ்டார் வசீகரம் கூடும். செயல்திறன் வெளிப்படும். இந்த இராசிக்காரப் பெண்கள் அரசியல் களத்தில் குதித்திருந்தால், வெற்றிச் சிகரம் எட்டுவார்கள். தொழிலாளர்கள் எண்ணம் நிறைவேறும். விவசாயிகள் ஆதாயம் பெறுவார்கள். பேச்சில் ஓர் அவுன்ஸ் கடுமை கூட இருக்கக் கூடாது. உடல் நலத்தில் உஷாராக இருந்தே ஆகணும். வியாபாரத்துல அகலக் கால் வைச்சா, பாலன்ஸ் தவறி விழ வேண்டியிருக்கும் கவனம் தேவை. தாய்வழி உறவினர்களால் சிறு பிரச்னை ஏற்படும். நிதானமாகச் செயல்படுங்கள். ஓ.கே!

**மே 16 முதல் 22 வரை**

# வட்டமேஜை

## பழிக்கவா பத்திரிகை!




✉ ஒரு கட்சி பதவியில் அமரவே கூடாது என்று கச்சை கட்டிக் கொண்டு கோதாவில் இறங்குவது ஆரோக்கியமான வழி அல்ல. அமரர் கல்கியின் ஆவி கண்ணீர் வடிக்கும்.

**சத்தியமங்கலம், மூர்த்தி**

✉ அனுதாப அலையை ஏற்படுத்த ஜெயலலிதாவால் செய்யப்படும் பொய்ப் பிரசாரத்தை அக்குவேறு ஆணி வேறாக அலசி, மக்களுக்குத் தெளிவை உண்டாக்கிய தலையங்கம் அருமை.

**தாம்பரம், ரொசாரியோ ரவிச்சந்திரன்**

✉ 'கல்கி' நாளுக்கு நாள் தரத்தையும் நடுநிலைமையையும் இழந்து கொண்டு வருகிறது. ஜெயலலிதாவைப் பழிப்பதற்கே பத்திரிகை நடத்துகிறீர்களோ என்று தோன்றுகிறது. 'பொன்னியின் செல்வன்' முடிந்ததும் 'கல்கி' வாங்குவதை நிறுத்திவிட முடிவு செய்துவிட்டேன்.

**சென்னை, வைத்தியநாதன்**

✉ ஜெயலலிதாவின் பித்தலாட்ட அரசியலைத் துணிச்சலுடன் அரங்கேற்றுவதில் நம்பர் ஒன் கல்கிதான்.

**நெல்லையப்பபுரம், டி.செல்வன்**

✉ 'கோடை' கவிதை அருமை. தாத்தாவின் முறுக்கு மீசையில் அவருடைய உள்ள உணர்வுகளை வெளிப்படுத்தும் அவசரமில்லாத கவிதை. நிரந்தரமாக உள்ளத்தில் இடம் பெற்றது.

**திருச்சி, உஷா முத்துராமன்**

✉ இது எலெக்ஷன் நேரம் என்பதால் சினிமா விமர்சனத்தில்கூட தேர்தல் வார்த்தைகளை உபயோகித்திருப்பது ரசிக்க வைத்தது!

**பொன்மலை, ஆர்.பிரகாஷ்**

✉ 'ஷி வாஸ் ரிலீவ்ட் அஃப் ஹர் செயின்' என்கிற ஆங்கில வார்த்தைக்கு அர்த்தம் சொல்வதற்கு சுமி எடுத்துக் கொண்ட உதாரணம் மிக அருமை. வெல்டன் சுமி!

**மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்**

✉ கிருஷ்ணகிரி சட்டமன்றத் தொகுதியில் காலை 9 மணியிலிருந்து மாலை 6 மணிவரை ஏற்பட்ட பரபரப்பு - ஜெயலலிதா மனுத் தாக்கல் நடத்திய நவரசக் காட்சி - தமிழகம் முழுவதும் அனல் தகிப்பைத் தந்தது நிஜம்.

**பள்ளிபாளையம், ரஞ்சனிப்ரியன்**

✉ நான்கு டயர்கள் வெடித்துவிட்டால் தள்ளினாலும் வண்டி ஓடாது. வாக்காளர்களிடம் 'வண்டியைத் தள்ளுங்க' என்று ஜெ. விடுக்கும் வேண்டுகோள் கார்ட்டூன் கருத்துக்கள் பல பொதிந்துள்ள ஒன்று.

**திருவரங்கம், அ.சம்பத்**

✉ வெறும் பேப்பர் டவலால் மட்டும் அமெரிக்காவுக்கு நூறு கோடி டாலர் வருமானமா? தேன்கூடு தந்த செய்தி படித்தேன்; மலைத்தேன்; வியந்தேன்!

**அரவக்குறிச்சிப்பட்டி, எம்.அசோக்ராஜா**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2001

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!



**முதல் பரிசு – ரூ. 5000**
**இரண்டாம் பரிசு – ரூ. 3000**
**மூன்றாம் பரிசு – ரூ. 2000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்கு வரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2001'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 5 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

— ஆசிரியர்

# 19 மூடுபனி

யமுனாவின் உடம்புக்குள் ரத்தம் யோசித்து யோசித்து ஓடியது. கையில் பிடித்திருந்த டெலிபோன் ரிஸீவர் ஓர் உயிருள்ள ஜந்து போல் நடுங்கியது.

"யாரவன்...?"

'பெட்டிக்கடை வாசலில் நின்று கொண்டு என்னையே பார்த்து முறைக்கிறவன்...?'

சரளாவின் குரல் மறுமுனையிலிருந்து கேட்டது. "என்னடி பேச்சையே காணோம்...?"

"சரளா..."

"ம்..."

"எஸ்.டி.டி. பூத்துக்கு எதிரில் இருக்கிற ஒரு பெட்டிக் கடையிலிருந்து தாடி வெச்ச ஓர் ஆள் என்னையே பார்த்துக்கிட்டிருக்கான்."

"தாடி வெச்ச ஆளா...?"

"ஆமா..."

"எவனாவது ஜொள்ளு பார்ட்டியா இருக்கும்."

"பார்த்தா அப்படித் தெரியலை.."

"உன்னோட ஏரியாவில் இருக்கிற ஆளா...?"

"இதுக்கு முந்தி இவனைப் பார்த்தது இல்லை. எனக்கு பயம்மாயிருக்கு. நான் வீட்டுக்குக் கிளம்பட்டுமா...? வீட்டிலிருந்து உனக்கு ஃபோன் பண்றேன்."



"சரி... நீ கிளம்பு...! லாயர் மனோன்மணி உனக்கு உதவி பண்ண வந்திருக்கிறது கடவுள் புண்ணியம். ஆனா வீட்டுக்குத் தெரியாமே மனோன்மணியை ஹேண்டில் பண்ண உன்னால முடியுமா....?"

"முடியும்...! மாமாவும் அத்தையும் சௌம்யாவோட கல்யாண அழைப்புக்காக இனி தினசரி வெளியே போய்த்தான் ஆகணும். என்னோட கணவரும் ஆபீஸுக்குப் போயிடுவார். ஹரிதாவுக்கு நாளையிலேர்ந்து காலேஜ்ல ஸ்பெஷல் கிளாஸ். காலையில் போனா சாயந்தரம்தான் வருவா. கல்யாணப் பெண் சௌம்யா ஒரு தூங்குமூஞ்சி கேஸ். அவளைச் சமாளிக்கிறது ஒண்ணும் பெரிய காரியம் கிடையாது."

"என்ன யமுனா... கிளம்பறேன்னு சொல்லிட்டுப் ஃபோன்லே பேசிக்கிட்டே இருக்கே... பெட்டிக்கடை வாசல்ல நின்னுட்டிருந்த அந்த தாடிக்காரன் போய்ட்டானா....?"

"இன்னும் இருக்கான். பார்வை அப்படியே ஆணியடிச்ச மாதிரி என் மேலேயே இருக்கு..."

"சரி யமுனா... நீ கிளம்பு. வீட்ல யாரும் இல்லேன்னா மத்தியானத்துக்கு மேலே எனக்கு ஃபோன் பண்ணு."

**ராஜேஷ் குமார்**

# நிலவு

“ம்...” யமுனா ரிஸீவரை கொக்கியில் மாட்டிவிட்டு கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். பூத் பெண்ணின் கையில் இரண்டு ரூபாய் நாணயமொன்றைத் திணித்து விட்டுத் தெருவுக்கு வந்து நடை போட்டாள்.

இதயத் துடிப்பு உச்சத்துக்குப் போக, பிடரியும் முதுகும் வியர்த்து வழிந்தது.

'அந்த தாடிக்காரன் பின்தொடர்ந்து வருகிறானா இல்லை பெட்டிக் கடையிலேயே நின்று விட்டானா?'

'திரும்பிப் பார்க்கலாமா...?'

'பார்க்காதே' என்று மனசு தீர்மானமாய்ச் சொன்னாலும் தலை தன்னிச்சையாய்த் திரும்பிப் பார்த்து விட்டது.

தாடிக்காரன் வந்து கொண்டிருந்தான். உதட்டில் இப்போது சிகரெட் இடம் பிடித்திருந்தது.

'யாரிவன்...?'

'மறுபடியும் கோயிலுக்குப் போய் மனோன்மணியிடம் விஷயத்தைச் சொல்லலாமா...?'

'வேண்டாம்...! மனோன்மணி தாடிக்காரனிடம் ஏதாவது கேட்கப் போய் பிரச்னை பெரிதாகிவிடும்...!'

யமுனா யோசித்துக் கொண்டே நடந்தாள். இரண்டு தெருக்கள் வரை திரும்பிப் பார்க்காமல் நடந்தவள் தன்னுடைய தெருவுக்குள் நுழையும் முன்பாக மறுபடியும் ஒரு தடவை திரும்பிப் பார்த்தாள்.

தாடிக்காரனைக் காணோம். தெரு துடைத்து வைத்த மாதிரி சுத்தமாய் இருந்தது.

'சரளா சொன்ன மாதிரி ஜொள்ளு பார்ட்டியாய் இருப்பானோ...?'

யமுனாவின் இதயத் துடிப்பு இப்போது இயல்புக்கு வந்திருக்க வியர்ப்பதும் நின்று போய் முகத்தில் காற்று அடித்தது.

வேகமாய் நடை போட்டாள். தொலைவில் பங்களா காம்பௌண்ட் கேட் பார்வைக்குக் கிடைத்தது.

'சௌம்யா காத்துக் கொண்டிருப்பாள்!'



எட்டி நடைபோட்டவள் மீண்டும் திரும்பிப் பார்த்தாள்.

தாடிக்காரன் இல்லை. காய்கறி கூடைக்காரி மட்டும் பார்வைக்குக் கிடைத்தாள். "டயம் எத்தினிம்மா?" கூடைக் காரி கேட்ட கேள்விக்கு "பத்தே முக்கால்" என்று பதில் சொல்லிக் கொண்டே நிற்காமல் நடை போட்டாள்.

வீடு நெருங்கியது.

வெறுமனே சாத்தியிருந்த காம்பௌண்ட் கேட்டைத் தள்ளிக் கொண்டு உள்ளே போன யமுனா யாரோ இழுத்துப் பிடித்த தினுசில் அதிர்ச்சியில் சட்டென்று நின்றாள்.

போர்டிகோவில் அம்பாசிடர் கார் நின்றிருந்தது. கார் டிரைவர் மாணிக்கம் போர்டிகோ தூணுக்குப் பின் பக்கம் மறைவாய் நின்று பீடி குடித்துக் கொண்டிருக்க, வீட்டுக்குள் பேச்சுக் குரல் கேட்டது.

இருட்டிலிருந்து வெளிப்பட்ட இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் மஃப்டியில் இருந்ததால் வருண் அவரைக் குழப்பமாய்ப் பார்த்தான்.

"யார் நீங்க...?"

"போலீஸ்...!"

வருண் உள்ளுக்குள் மிரண்டான். 'தயானந்த் விவகாரம் போலீஸுக்குத் தெரிந்து விட்டதோ...?'

"என்ன வருண்...! நான் போலீஸ்னு சொன்னதுல உனக்கு நம்பிக்கையில்லையா? அடையாள அட்டையைப் பார்க்கறியா...? மதுராந்தகம் போலீஸ் இன்ஸ்பெக்டர் பால் பாண்டியன்..." தன் பாக்கெட்டில் வைத்து இருந்த அடையாள அட்டையை எடுத்து வருணுக்கு முன்பாய்ப் பிடித்தார் பால் பாண்டியன்.

வருண் வியர்த்து மினுமினுத்த முகத்தோடு சிரமமாய் எச்சில் விழுங்கினான். "ஸார்... எ... என்ன விஷயமாய் என்னை நிறுத்தி...?"

"விசாரணை பண்ணிட்டிருக்கீங்கன்னு கேட்கறியா?"

வருண் தலையாட்டினான்.

பால்பாண்டியன் கேட்டார். "இப்ப பஸ் ஏத்தி விட்டியே... அந்தப் பொண்ணு யாரு...?"

"ஜெனிஃபர் ஸார்..."

"காதலியா?"

"ம்..."

"கல்யாணம் பண்ணிக்கப் போறே போலிருக்கு?"

"ஆமா... ஸார்... ஜெனிஃபர் வீட்ல முறைப்படியான கல்யாணத்துக்கு ஒத்துக்க மாட்டாங்க. அதான் நாளைக்குக் கோயில்ல வெச்சு... கல்யாணத்தை முடிச்சுக்கலாம்னு..."

"இட்ஸ் ஓகே...! அது உன்னோட பர்சனல் மேட்டர்...! அதுல தலையிட நான் விரும்பலை. நான் உன்னை விசாரணை பண்ண வந்தது வேற ஒரு விஷயமா..."

"என்ன ஸார்...?"

"உன்னோட ஃப்ரண்ட் லீலா கிருஷ்ணனைக் கடைசியா என்னிக்குப் பார்த்தே...?"

"லீ...லீலாகிருஷ்ணனா...?"

"ம்..."

"அவனைப் பார்த்து ரொம்ப நாளாச்சு ஸார்."

"ரொம்ப நான்னா... எவ்வளவு நாள்?"

"ரெண்டு மூணு மாசத்துக்கு மேலேயே இருக்கும் ஸார். எதுக்காக கேட்கறீங்க...?"

"அப்புறமா சொல்றேன். மொதல்ல நான் கேக்கிறதுக்கு பதில்... கடந்த ரெண்டு மூணு மாசமா நீ லீலாகிருஷ்ணனைப் பார்க்கவே யில்லை...?"

"இல்ல ஸார்... போன மாசத்துல ஒரு நாள் அவனைப் பார்க்கிறதுக்காக வண்ணாரப்பேட்டை அட்ரஸுக்குப் போயிருந்தேன். வீடு மாறிப் போய்ட்டதாகச் சொன்னாங்க... ஏதோ ஒரு மதுராந்தகம் அட்ரஸ்."

"போய்ப் பார்க்கலையா?"

"இல்லை..."

"ஏன்...?"

"எனக்கு ஒரு வேலையைத் தேடிக்கிற மும்முரத்தில் இருந்ததால யாரைப் பத்தியும் நான் அக்கறை பட்டுக்கலை ஸார்."

"சரி... லீலா கிருஷ்ணன் என்ன வேலை பார்த்துட்டிருந்தான்னு தெரியுமா...?"

"முன்னாடி ஒரு பட்டன் பாக்டரியில் வேலை பார்த்துக்கிட்டு இருந்தான். அதை ரிசைன் பண்ணிட்டு ஒரு டெக்ஸ்டைல் மில்லில் கொஞ்ச நாள் வேலை பார்த்தான்.

---

## 'தம்பதிச் சிரிப்பு!

**"சாம்பார் இன்னிக்குப் பிரமாதம் கமலா!"**

**"தெரியுமே, பக்கத்து வீட்லேருந்து கொஞ்சம் இரவல் வாங்கிட்டு வந்தா உடனே அசடு வழிவீங்களே..!"**

**- உ. ராஜாஜி**

அதுக்கப்புறம் தனியா ஏதோ பிஸினஸ் பண்ணினான். அதுக்கப்புறம் அவனைப் பத்தி எனக்கு எதுவும் தெரியாது ஸார்..."

"லீலாகிருஷ்ணனுக்கு ஏதாவது காதல் விவகாரம் இருந்ததா...?"

"ம்... ஒரு பொண்ணைக் காதலிக்கிறதா என்கிட்டே சொல்லியிருக்கான்."

"அந்தப் பொண்ணு யார்ன்னு தெரியுமா?"

"போட்டோ காட்டியிருக்கான். அந்தப் பெண் அவனுக்கு எழுதின சில கடிதங்களையும் அனுப்பின வாழ்த்து அட்டைகளையும் காட்டியிருக்கான்... பொண்ணோட பேரைக் கூட சொன்னான். இப்போ ஞாபகம் இல்லை."

"பேர் நான் சொல்றேன்...! யமுனாவா?"

"இருக்கலாம்! சரியா ஞாபகம் இல்லை."

"இந்தப் பொண்ணா... பாரு...?" பால் பாண்டியன் தன் பாக்கெட்டில் வைத்திருந்த யமுனாவின் போட்டோவை எடுத்துக் காட்டினார்.

போட்டோவை வாங்கி சோடியம் வேப்பர் விளக்கு வெளிச்சத்தில் உயர்த்திப் பிடித்துப் பார்த்தான் வருண்.

பத்து விநாடி தீர்க்கமான பார்வைக்குப் பின் பால்பாண்டியனிடம் திரும்பினான் வருண்.

"இந்தப் பொண்ணுதான் ஸார்..."

"ரெண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் விரும்பியிருக்காங்க. பின்னே ஏன் கல்யாணம் பண்ணிக்கலை...?"

"தெரியலை... ஸார்... இந்தக் கேள்வியை அவன்கிட்டே கேட்டாத்தான் சரியான பதில் கிடைக்கும்."

"லீலாகிருஷ்ணன்கிட்டே இனிமேல் இந்தக் கேள்வியை மட்டுமல்ல. எந்தக் கேள்வியையும் கேட்க முடியாது."

"ஸ...ஸ...ஸார்...! நீங்க என்ன சொல்றீங்க?"

"லீலாகிருஷ்ணன் நேத்து ராத்திரி இறந்துட்டான்..."



வருண் விக்கித்துப் போய்க் கேட்டான்.

"எ...எ... எப்படி ஸார்...?"

"தற்கொலை."

"தற்கொலை பண்ணிக்கிற அளவுக்கு லீலாகிருஷ்ணன் கோழை கிடையாது ஸார்... அவனோட மனதைரியம் வேற யார்க்கும் வராது."

"அப்படீன்னா... இது கொலையா...?"

"எனக்குத் தெரியாது ஸார்."

"சரி...! லீலாகிருஷ்ணன் கொலை செய்யப்பட்டிருப்பதாக வெச்சுக்குவோம். அப்படி அவர் கொலை செய்யப்பட்டிருந்தா அந்தக் கொலைக்கு யார் காரணமாக இருக்க முடியும்னு நினைக்கிறே வருண்...?"

"ஸார்... சமீப காலமா லீலாகிருஷ்ணனுக்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அவனோட சமீபத்திய ஃப்ரண்ட்ஸ் சர்க்கிளில் யார் யார் இருந்தாங்கன்னு எனக்குத் தெரியாது..."

"லீலாகிருஷ்ணன் காதலிச்ச யமுனா இப்போ ஒரு பெரிய பணக்கார வீட்டுக்கு மருமகளா இருக்கா. அது உனக்குத் தெரியுமா...?"

"தெரியாது..."

"யமுனாவை எந்தச் சந்தர்ப்பத்திலாவது நீ நேர்ல பார்த்துப் பேசியிருக்கியா...?"

"இல்லை. போட்டோவில் பார்த்ததோடு சரி. நேர்ல பார்த்தது இல்லை..."

"நீயும் லீலாகிருஷ்ணனும் மூணு மாசத்துக்கு முன்னாடி வரை க்ளோஸ் ஃப்ரண்ட்ஸ். நடுவில் உங்க ரெண்டு பேர்க்கும் ஏதாவது பகையா?"

"சேச்சே...! அப்படியெல்லாம் எதுவும் இல்லை ஸார்..."

"ஏதோ இருக்குன்னு என் மனசுக்குப் படுது. உன்னோட ரூமை சோதனை போடணும். போடலாமா?"

"ஸ... ஸார்..." திகைத்த வருணின் மனசுக்குள் ப்ரீப்கேஸும் அதில் அடைபட்டிருந்த பத்து லட்ச ரூபாயும் ஞாபகத்துக்கு வந்தது.

உடம்பு வியர்த்தது.

"என்ன போலாமா?"

"என் மேல சந்தேகப்படறீங்களா ஸார்....?"

பால் பாண்டியன் சிரித்தார். "உன் மேல சந்தேகப்படாமே இருக்கிறதுக்கு நீ ஒண்ணும் உத்தமபுத்திரன் கிடையாதே.... ஒரு கொலையைப் பண்ணிட்டு மும்பை ஜெயில்ல ரெண்டு வருஷம் இருந்தவன்தானே....?"

(தொடரும்)

அழகான அச்சு அமைப்பில் வெளியாகியுள்ளது 'கிறிஸ்து வெண்பா 1000' நூல். வெண்பாவில் புகழேந்திப் புலவர்தான் புகழ் பெற்றவர். கம்பரும் இன்னும் பலரும் அருமையான வெண்பாக்களை எழுதியிருக்கிறார்கள். இருந்தும் 'வெண்பா புகழேந்தி'




# வெண்பாவில் ஏசு!

என்று அவருக்குத் தான் பெயர். அதே பெயரை முன் வைத்து, வடவைப் புகழேந்தி – மரியந்தோனி என்பார் இயேசுபிரானின் வரலாற்றை நுட்பமான தகவல்களோடு ஆயிரம் வெண்பாக்களில் உருவாக்கியிருக்கிறார்.

'குரலொலி' என்னும் கிறிஸ்து மார்க்க மாத இதழ் இவருக்கு ஊக்கமளித்திருக்கிறது என்பது முன்னுரையிலிருந்து தெரிய வருகிறது.

கிறிஸ்தவ மதத்தவர்கள்தான் என்றில்லை, வளமான தமிழ் வெண்பாக்களின் நேர்த்திக்காகவும் அழகுக்காகவும், தமிழன்பர்கள் யாரும் படித்து இன்புறலாம்.

எவ்வளவுதான் அறிவியலில் சாதனைகள் செய்தாலும், அடிப்படையில் கடவுள் நம்பிக்கையே துணை நின்று உதவுகிறது.

ஆன்மிக உணர்வில்லாத அறிவியல் குருட்டுத்தனமானது என்று கூடப் பெரியவர்கள் சொல்வார்கள். அந்த வகையில் நிலாத் தரையில் கால் பதித்த நீல் ஆர்ம்ஸ்ட்ராங் போன்றவர்கள் இறைவனுக்கு நன்றி சொன்னதுண்டு. அதை விளக்குகிற ஒரு வெண்பா:

*கடவுள் பயத்துடன் காத்தோம்பி ஏத்தி*
*நடந்து கொடி நட்டேம் நிலாக்கல் – எடுத்து வந்தேம்*
*என்றார்நீல் ஆம்ஸ்டிராங் சால்ஸ்கரன்ரா(டு) அம்புலியில்*
*நன்றி சொன்னான் யேசு நலத்து.*

பைபிளில் வரும் குறிப்பிட்ட சில சொற்கள் அந்த மரபில் பயிற்சி பெறாதவர்களுக்குப் புரியாது. சங்கை, போதகர், மன் நாட்டு போன்ற சொற்கள். இருப்பினும் அந்த மரபுகளை மதித்துப் படிக்கும் போது பல பாடல்களிலே நம்மை இழந்து விடுகிறோம்.

இன்னும் ஒரு அருமையான வெண்பா, பொய்ச் சாட்சி சொல்ல மறுத்து, தன்னிடம் தர முயன்ற லஞ்சக் காசைத் தூக்கி வீசிய உண்மையான காவலாளியைப் பற்றி –

***காசெல்லாம் வீசினான் கல்லறை காத்த ஜிரிம்***
***யேசுயிர்த்தார் மெய்யென்(று) இயம்பினான் – ஆசை***
***பணத்தால் வருமெனினும் பாவமாம் லஞ்சம்***
***உணர்ந்தால் வெறுப்பு வரும் உற்று.***

இயேசுபிரான் வரலாறோடு நில்லாமல் முதலாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த புனித தோமையார் படுகொலை செய்யப்பட்டதையும் அதன் பிறகு வந்த புனித பிரான்சிஸ் சேவியர் பணிகளைப் பற்றியும் வெண்பாக்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. தோமையார் வரலாறு மிகவும் உருக்கமானது.

**(கிறிஸ்துவெண்பா 1000, வெளியீடு: பூம்புகார் பதிப்பகம், சென்னை – 108)**

**— சுப்ர.பாலன்**

மூன்று லட்சம் ரூபாய் பரிசு கிடைத்திருக்கிறது ஒரு தமிழ் நாவலின் மொழி பெயர்ப்புக்கு. தலைப்பு : 'கருக்கு'. ஆங்கில தலைப்பும் அதே!

ஒடுக்கப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த மக்களின் அவல நிலை பற்றிய ஆதங்க வெளிப்பாடு. எழுதியவர் தலித் இனத்தைச் சேர்ந்த நாற்பத்து மூன்று வயது பெண்மணி. பெயர் : பவுஸ்டினா மேரி பாத்திமா ராணி.




புனைபெயர் : பாமா.

92ம் ஆண்டு தமிழில் எழுதப்பட்ட புத்தகம் 'கருக்கு'. சில ஆண்டுகளுக்கு முன்பு, இந்தத் தமிழ் நாவலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார் லட்சுமி ஹாம் ஸ்டிராம். பரிசுத் தொகை, மூல நூலை எழுதிய ஆசிரியர், அதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர் இருவருக்கும் சமமாக பிரிக்கப்பட்டு தலா ஒன்றரை லட்சம் வழங்கப்பட்டுள்ளது.

# ஊரே எதிர்த்த நாவலுக்கு விருது!

க்ராஸ்வோர்டு புத்தக விருது 1998ம் ஆண்டு முதல் ஆண்டுதோறும் வழங்கப்பட்டு வருகிறது. நேரடி ஆங்கில நூல் ஒன்றுக்கும், இந்திய மொழி நூல்களின் ஆங்கில மொழி பெயர்ப்பு ஒன்றுக்கும் என இரண்டு பரிசுகள்.

எழுத்தாளர் பாமாவைச் சந்தித்தோம். வார்த்தைகளை அளந்து பேசுகிறார்.

"'கருக்கு', ஒரு விதத்தில் பார்த்தால், என்னுடைய சுயசரிதை என்று சொல்லலாம். ஆனால், அதில் இடம் பெற்றுள்ள அனைத்தும் என்னுடைய அனுபவங்கள் மட்டுமே இல்லை. நான் சார்ந்த சமூகத்தில் நடைபெறும் அவலங்கள், அவர்களின் குதூகலங்கள், குணநலன்கள், பழக்க வழக்கம், கலாசாரம் என அனைத்தையும் எழுத்தில் அடையாளம் காட்டியிருக்கிறேன்" என்றார்.

"இந்த நாவலை எழுதும் எண்ணம் உங்களுக்கு எப்படி ஏற்பட்டது?"



• லக்ஷ்மி ஹாம்ஸ்ட்ராம்

## வருத்தம் உண்டு; வலி இல்லை!

மணிமேகலை, சிலப்பதிகாரம் போன்ற பழந் தமிழ் நூல்கள், அம்பை, அசோகமித்ரன் போன்ற நவீன தமிழ் எழுத்தாளர்களின் கதைகள் – என பலதரப்பட்ட ஆங்கில மொழி பெயர்ப்புகளை வெற்றிகரமாக அளித்திருப்பவர் லக்ஷ்மி ஹாம் ஸ்ட்ராம்.. லண்டன்வாசி. அசோகமித்ரன் தமது கட்டுரை ஒன்றில் லக்ஷ்மி பற்றிக் குறிப்பிட்டிருந்ததை ஞாபகம் வைத்துக்கொண்டு, மொழிபெயர்ப்பாளராக அவரைத் தேர்வு செய்தார் மாக்மில்லன் பதிப்பகத்தைச் சார்ந்த மின்னி கிருஷ்ணன். லக்ஷ்மியும் பாமாவும் பலமுறை சந்தித்து உரையாடிய பிறகே மொழி பெயர்ப்புப் பணி தொடங்கியது. "மூலக்கதை எழுதி 7 ஆண்டுகளுக்குப் பிறகு ஆங்கில மொழி பெயர்ப்பைப் படித்தேன். அப்போது தோன்றிய உணர்ச்சி வெள்ளம் மீண்டும் பொங்கியது. இந்த நாவலை எழுதி முடித்த பிறகு எத்தனையோ விஷயங்கள் நடந்துவிட்டன. என் தங்கை கோரமான மரணம் அடைந்தாள். என் பெற்றோர் அடுத்தடுத்து இறந்து போயினர். தனியாக வாழ்கிறேன். ஆனால் தலித்கள் விடுதலைக்காக உழைக்க நிறைய வாய்ப்பு கிட்டியிருக்கிறது. என் வருத்தங்களை அமைதியாக இதயத்தில் சுமந்தபடி அர்ப்பணிப்பு உணர்வுடன் அர்த்தமுள்ள வாழ்க்கை நடத்துகிறேன்" என்று ஆங்கில நூலின் பின்னுரையில் குறிப்பிட்டுள்ளார் பாமா.

"அப்போது எனக்கு ஏழெட்டு வயசிருக்கும். எங்கள் சொந்த கிராமமான புதுப்பட்டி(விருதுநகர் மாவட்டம்)யில் இருந்தேன். ஒரு நாள், தெருவில் ஒருவர் வித்தியாசமாக நடந்து செல்வதைப் பார்த்தேன். அவர் கையில் ஒரு பொட்டலம். ஆனால் அவர், அதனை, அப்படியே கையில் வைத்து எடுத்துக் கொண்டு போகாமல், அதில் கட்டப்பட்டிருந்த நூலை மட்டும் பிடித்துக் கொண்டு, பொட்டலத்தை எடுத்துக் கொண்டு போனார். வளர்ந்த மனிதர் இப்படி வினோதமாய் நடந்து போகிறாரே என்று என் அப்பாவிடம் கேட்டபோது, அவர் சொன்ன விஷயம், என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. அந்த மனிதர் தாழ்த்தப்பட்ட ஜாதிக்காரர். தனது முதலாளிக்கு டிபன் வாங்கிக் கொண்டு போகிறார். அவர் தாழ்ந்த ஜாதி என்பதால், உணவுப் பொட்டலத்தை நேரடியாகத் தொடாமல், பொட்டலம் கட்டியிருந்த நூலைப் பிடித்து எடுத்துக் கொண்டு போகிறார்.

"தாழ்ந்த ஜாதிக்காரர் டிபன் வாங்கிக் கொண்டு வரலாம். ஆனால் அவர் அதைக் கையால் தொடக்கூடாது' என்ற லாஜிக்கை என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. இதுபோல என்னைச் சுற்றி ஏகப்பட்ட சம்பவங்கள். இவற்றையெல்லாம் பார்த்து, மனம் நொந்து போனேன். தலித் இனத்தை மேம்படுத்தும் விதமாக, அவர்களுக்குக் கல்வி கற்பிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் கன்னியாஸ்த்ரீ ஆனேன். பயிற்சி மற்றும் சேவையில் ஏழாண்டுகள் கழிந்தன.

"இந்தக் காலகட்டத்தில், எந்த மதமானாலும் சரி, தலித் மக்கள் ஒரே மாதிரிதான் நடத்தப்படுகிறார்கள் என்று புரிந்தது. 'கன்யாஸ்த்ரீ' என்ற தளையிலிருந்து என்னை விடுவித்துக்கொண்டேன். அதை தலித் சமூகத்திலேயே, பலரால் ஜீரணிக்க முடியவில்லை. இந்தக் கட்டத்தில்தான். என் அனுபவங்கள், எண்ணங்கள், குமுறல்களை எல்லாம், எழுத்தில் வடித்தேன். 'கருக்கு' பிறந்தது."

"நாவலுக்கு என்ன ரியாக்ஷன்?"

"என் சொந்த ஊர்க்காரர்கள்கூட, எதற்காக இப்படி ஒரு புத்தகம் எழுதவேண்டும்? என்று எரிச்சல் அடைந்தனர். என் பெற்றோர்களிடம் தங்கள் அதிருப்தியை வெளிப்படுத்தினர். என் அம்மா, எனக்கு தார்மீக பலத்தைக் கொடுத்தாலும், அப்பா, ஒரு சில முறை, 'இந்தக் கதையை எழுதாமல் இருந்திருக்கக் கூடாதா?' என என்னிடமே கேட்டதுண்டு! நான் என் சொந்த கிராமத்துக்குப் போக முடியாத சூழ்நிலைகூட ஏற்பட்டது? இப்போது எல்லாம் சரியாகி விட்டது."

"பரிசுத் தொகையை என்ன செய்யப் போகிறீர்கள்?"

"ஒன்றரை லட்சம் என்பது எனக்குப் பெரிய தொகை. சற்றும் எதிர்பாராமல் கிடைத்துள்ள இவ்வளவு பணத்தை என்ன செய்வது என்று இன்னும் முடிவு செய்யவில்லை.

அடுத்த நாவல்?

"விரைவில்"

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**
படம் : **தேர்ட் ஐ பிரகாஷ்**

# சிரிப்பு வந்திருக்குதோ!



''நம்ம பையனை அரசியல் பொதுக்கூட்டங்களுக்குப் போகச் சொல்லாதீங்க...!''

''ஏன் சமயா?''

''ஏண்டா ஒன்பதாங் கிளாஸ்ல பெயில் ஆனேன்னு கேட்டதுக்கு 'தர்மத்தின் வாழ்வுதனைச் சூது கௌவும்... தர்மம் மறுபடியும் வெல்லும்'ங்கறான்!''

— புளியரை கணேசன்



''கடனாளி ஆவீங்கன்னு பலன் சொன்னதுக்கு ஒருத்தர் அடிக்க வந்துட்டார்...''

''கேட்ட இடத்தில் பணம் கிடைக்கும்னு அதையே மாத்திச் சொல்லிப் பாருங்க... சந்தோஷமா போவாங்க!''

— பார்வதவர்த்தினி



''அந்த லாரியில என்ன அவ்வளவு கூட்டம்?''

''கூட்டணி தலைவர்கள் எல்லோரும் பிரசாரத்துக்கு சேர்ந்து போறாங்க!''

— பா. ராஜாமுகமது



உங்க வசனத்துக்காகவே அந்த படத்த ஜனங்க திரும்பத் திரும்ப பாக்கறாங்க''

''அப்படியா...!''

''ஆமாம். எத்தனை முறை கேட்டாலும் வசனம் புரிய மாட்டேங்குதாம்...''

— அம்பை தேவா



''பீச்சுல நீ இழுத்து விடுற செலவு யாருக்குமே பொறுக்கலே!''

''என்ன சொல்றீங்க?''

''வேணும்னா காதலிய மாத்திப் பாருங்கனு சுண்டல்காரப் பையனே சொல்றான்!

— அம்பை தேவா

டாக்டர் ராம்ஷேகர் மனத்தை ஒருநிலைப்படுத்தப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டிருந்தார்.

'நடந்துகொண்டிருப்பது தேசிய மருத்துவர்கள் மாநாடு. தமிழகத் தலைநகரில் வந்திருக்கும் இரண்டே பிரதிநிதிகளில் நானும் ஒருவன். இன்று மதியம் இடம் பெறவிருக்கும் என் உரையைக் கேட்கப் பலரும் ஆவலாக இருக்கிறார்கள். அதேபோல் பிறரது கருத்துக்களையும் நான் கவனத்துடன் கேட்பதுதான் முறை'

மனவானரம் அவ்வப்போது அடங்கியும் அவ்வப்போது தாவியும் விளையாடிக் கொண்டிருந்தது. முக்கியமாக சிவப்ரியாவை அடிக்கடி நினைவுபடுத்திக் கொண்டிருந்தது.

'இவதான் என் மருத்துவ வாரிசு' என்று சிவப்ரியாவைத் தாம் செல்லுமிடங்களிலெல்லாம் அறிமுகப்படுத்தியிருக்கிறார். பலருக்கும் அதில் வியப்பு.

ஆனந்த் கூட ஒருமுறை தனது ஏக்கத்தை அவரிடம் வெளிப்படுத்தியிருக்கிறான். 'பல வருஷங்களாக உங்களுக்கு உதவியாளர்களா இருக்கும் திறமைசாலிகள் இருக்காங்க. ஏன், சிவப்ரியாவைவிட இரண்டு வருஷம் சீனியரான நானே உங்க க்ளினிக்கிலேதான் வேலை செய்யறேன். எங்க அத்தனை பேரையும் விட்டுட்டு சிவப்ரியாவை இப்படித் தலைமேலே தூக்கி வச்சுக்கிட்டா நிறைய பேருக்குப் பொறாமை வரும் டாக்டர்."

ராம்ஷேகர் அவனது விழிகளை நேரடியாகச் சந்தித்தார். "உனக்குப் பொறாமையா இருக்கா?"

நேர்ப்பார்வையைத் தவிர்த்தான். "சிவப்ரியா என் வருங்கால மனைவி. அதனாலேயே எனக்குப் பொறாமை இல்லாமல் போகலாம். ஆனா மீதி பேருக்கு உங்க அறிவிப்பு உறுத்தும்."

'பொறாமை கிடையாது' என்ற உறுதியான பதிலுக்குப் பதிலாக 'பொறாமை இல்லாமல் போகலாம்' என்ற மழுப்பலான வார்த்தைகள்! ராம்ஷேகரின் கவனத்துக்கு இது



# மனம், மனமறிய ஆவல்...

தப்பவில்லை. 'உன் ஆதங்கம் புரியுது ஆனந்த். ஆனா எல்லாரையுமே இப்பவே தயார் செய்வதுதான் நல்லது.'

திறமைசாலியான மாணவி என்ற ஒரே தகுதியிலா அவளைத் தனது வாரிசு என அறிவித்தார்? அதன் பல்வேறு பின்னணிகளை அவர் எல்லோருக்கும் விளக்கிக் கொண்டிருக்க முடியுமா என்ன?

பள்ளியில் மிகச் சிறப்பான மதிப்பெண்களை அவள் பெற்றிருந்தது உண்மை. ஆனால் ஒரு




சிறப்பான சிற்பியாகச் செயல்பட்டு அவளிடமிருந்து அதிகப்படி கல்பரப்பைத் தகர்த்துவிட்டதும், நிறைவான பகுதிகளை மெருகேற்றியதும் தான்தானே. எனினும் அவள் ஓர் அற்புதப் படைப்பாக இருப்பாள் என்பதற்கான முன்னோட்டம் முதல் சந்திப்பிலேயே தெரிந்துவிட்டது.

சட்டம் கடுமையாக்கப்பட்டு விட்டாலும் ராகிங் கொடுமை கல்லூரிகளிலிருந்து விடைபெற்று விடவில்லை. வெளிப்படையாக இல்லாவிட்டாலும் அங்கங்கே சில மனவக்கிரங்கள் அரங்கேறிக் கொண்டுதான் இருந்தன. மருத்துவக் கல்லூரியிலும் டெட்டால் நெடியோடு சில கூவங்கள் கேள்விகளாயின.

"உன் பேரென்ன? சிவப்ரியாவா? அப்படின்னா லிங்கம்னால் உனக்கு ரொம்ப இஷ்டம்னு சொல்லு" ஓவென்று சிரித்தனர் அந்த ஆறு பேரும். அவர்களில் லிங்கம் என்ற சீனியர் மாணவன் ஒருவனும் இருந்தான்.

சிவப்ரியா தயங்கவில்லை. 'ஏன் சார், நீங்க டாக்டராகும்போது பொடுகு அதிகமாயிருக்குன்னு யாராவது சிகிச்சைக்கு வந்தால் இதய நோய்க்கான மருந்தை எழுதிக் கொடுப்பீங்க போலிருக்குதே.'

குழுவின் முகம் சிறுத்தது. எனினும் அவள் என்ன சொல்ல வருகிறாள் என்பது சட்டெனப் புலப்படாததால் சில கணங்களுக்குத் தயக்கம் தொடர்ந்தது.

**அருண் சரண்யா**

அவர்களின் பேச்சுவார்த்தை தெளிவாகக் காதில் விழ, பேராசிரியர் டாக்டர் ராம்ஷேகர் அதில் சுவாரசியத்துடன் தன் கவனத்தை செலுத்தினார். 'யார் இந்தப் பெண், தைரியமாக சீனியர்களைச் சமாளித்துக் கொண்டிருக்கிறாளே'. அவர்களுக்குத் தான் நிற்பது புலப்படாதமாதிரி இடையே ஒரு தடுப்பு இருந்தது அவருக்கு வசதியாகப் போனது.

"ஃப்ரெண்ட்ஸ், எனக்குப் பெயர் வச்சது எங்கம்மா. என் மகளுக்குப் பெயர் வைக்கும்போது வாங்க. அதுக்கான பெயர்க் காரணத்தைச் சொல்றேன். பை தி வே, நட்பிலே ஒரு வழிப்பாதை கூடாது. என் பெயரைத் தெரிஞ்சுக்கிட்டீங்க. உங்களை அறிமுகப்படுத்திக்கலியே?"

அவளது அணுகுமுறை பிடித்துப் போனது அனைவருக்குமே, ஒருவனைத் தவிர.

"உன் சாமர்த்தியத்தை எங்ககிட்டே காட்டாதே. நாங்க சீனியர்ஸ்."

"நம்மைவிட பெரிய ஆளுங்ககிட்டே மோதினாத்தானே பெருமை சார். நமக்கு நிச்சயம் இவங்க பயப்படுவாங்கன்னு தெரிஞ்சுக்கிட்டு மோதுவதிலே என்ன பெருமை சொல்லுங்க."

கேள்வி கேட்டவன் வாயடைத்துப் போனான். தொடர்ந்து அவளுடன் மோதினால், அவளுடைய கூற்றுப்படி, அது ஜூனியருடன் மோதும் கோழைத்தனம். வாயை மூடிக் கொண்டு விட்டாலோ ஜூனியரையே சமாளிக்க முடியாத கையாலாகாத்தனம். சில கணங்களில் சமாதானக் கொடியைப் பறக்க விட்டான். "ஒரே காலேஜிலே அடிக்கடி சந்திக்கப் போறோம். நமக்குள்ளே பட்டிமன்றம் எதுக்கு?" ஆலிவ் இலைகளைச் சுமந்த புறாக்களானார்கள் அத்தனை பேரும்.

சிவப்ரியாவின் மீது டாக்டர் ராம்ஷேகர் தனிக் கவனம் செலுத்தத் தொடங்கியது அப்போதுதான்.

துணிச்சலான பெண்ணாக அவளைச் சந்தித்த அவர், விரைவிலேயே அவளை நேரெதிர் நிலையிலும் காண நேர்ந்தது.

இறந்த கரப்பான் பூச்சியைக் கூறுபோடும் போதே குமட்டல் ஏற்படும் பல மாணவர்களுக்கு. அப்படியிருக்க முதல் முதலில் ஒருவரது பிரேதத்தை வெகு அருகில் பார்ப்பதும் அதன் பாகங்களை அறிந்து கொள்வதும் மருத்துவ மாணவர்களுக்கு முதலில் அதிர்ச்சியாக இருக்கும்.

ஆனால் சிவப்ரியா அதிர்ச்சியின் எல்லையை மீறியிருந்தாள். வகுப்பிலேயே மயக்கம் போட்டு விழ, அடுத்த இரு நாட்களுக்கு அவள் வகுப்புகளுக்கு வரவில்லை.

அவள் தங்கியிருந்த விடுதிக்குச் சென்றார். அவரது செல்வாக்கு அங்கு நுழையும் அனுமதியை அவருக்கு எளிதாகப் பெற்றுத் தந்தது.

அறைக்குள் சிவப்ரியா கண்களை மூடிப் படுத்திருக்க, அவள் நெற்றியில் ஐஸ் ஒத்தடம் கொடுத்துக் கொண்டிருந்தாள் ஒரு சக மாணவி. வயலின் இசை மெலிதாகப் பரவிக் கொண்டிருந்தது அறைக்குள்.

"நேற்று 103 இருந்தது டாக்டர். இப்ப பரவாயில்லை. 99" என்றபடி அங்கிருந்து நகர்ந்தாள். முதன்முதலில் தங்கள் அறைக்கு வந்திருக்கும் பேராசிரியருக்கு டீ கூட வாங்கி வந்து அளிக்காவிட்டால் எப்படி?

சிவப்ரியாவைக் கருணை பொங்கப் பார்த்தார் ராம்ஷேகர். ஒருமுறை அவளது அம்மா வந்து அவரைச் சந்தித்தபோது பல விவரங்களைக் கூறிவிட்டுப் போயிருந்தாள். மிகச் சுமாரான பின்னணி கொண்ட குடும்பத்திலிருந்து மிகப் பெரிய லட்சியத்தோடு வந்த பெண். வகுப்புக்களில் அவள் காட்டிய தீவிர கவனமும், அவள் கேட்டறிந்த சந்தேகங்களின் தன்மையும் அவள் மீது அவர் கொண்டிருந்த கருத்தை அதிகப்படுத்தின. அதுவும் தினமும் ஒருமுறையாவது மாலை வேளைகளில் வகுப்புகள் முடிந்தவுடன் தம்மைச் சந்தித்து 'டாக்டர் நீங்க நடத்தின பாடத்தோடு நேரடியாக சம்பந்தப்படாத சந்தேகம் இது...' என்று தொடங்கி தான் அதற்கு முன்தினம் படித்த



## கொர்... கொர்... சிரிப்பு

"ஆபீஸ்ல எல்லாரும்தானே தூங்கினாங்க... உங்களுக்கு மட்டும் எதுக்கு மெமோ கொடுக்கணும்?"

"தூக்கத்துல நான் பயங்கரமா உளறினதுல பல பேர் திடுக்கிட்டுக் கண் முழிச்சுட்டாங்களாம்! அவுங்களைத் திருப்திப்படுத்த என்னைப் பழி வாங்கிட்டார் மேனேஜர்!

— சீர்காழி வி. ரேவதி

ஒரு நூலிலிருந்து தனக்கேற்பட்ட ஐயத்தைத் தெளிவு செய்து கொள்வாள். அவருக்குப் பிரமிப்பாக இருக்கும். அவரது மாணவர்களில் பலரும் புத்திசாலிகள்தான். ஆனால் இந்தப் பெண்குருவி மிகப் பெரிய பனங்காய்களை வெற்றிகரமாகச் சுமக்கிறதே. அவள் படித்துக் கொண்டிருந்த நூல்கள் ஆராய்ச்சிப் படிப்புக் கானவை.

"அப்பா... அப்பா" என்று சிவப்ரியாவின் உதடுகள் மெதுவாக முணுமுணுத்ததைக் கேட்க முடிந்தது. அப்படி உச்சரித்தபோது அவள் முகத்தில் பெருவகையும், பெருவலியும் மாறி மாறித் தோன்றின.

திடீரென்று அவள் முகத்தில் தனது மகள் அனுவின் முகம் தெரிந்தது ராம்ஷேகருக்கு. தாமதமாகத் திருமணம் செய்துகொள்ளாமல் பிறரைப் போலவே விவாகமாகியிருந்தால் அனுவுக்கும் இவள் வயது இருக்கக்கூடும்.

சிறு வயதிலேயே தந்தையை இழந்தவள் சிவப்ரியா என்பதும், அந்த இழப்பு என்பது இறப்பு அல்ல, அவர் வீட்டைத் துறந்து போனது என்பதும், இன்றுவரை தனது தந்தை உயிரோடு இருக்கிறாரா இல்லையா என்பது புரியாத நிலையில் சிவப்ரியா இருப்பதும், 'ஒருவேளை இந்நேரம் அப்பா இறந்திருப் பாரோ என்னவோ?' என்ற சந்தேக பயம் அடிக்கடி எட்டிப் பார்க்க, அன்றைய வகுப் பில் பிரேதத்தைப் பார்த்தபோது 'நம் அப்பா வும் இப்படி ஒரு விபத்தில் இறந்திருக்கலாம்' என்ற எண்ணம் முற்றிப் போய்த்தான் இந்தக் காய்ச்சலும் மயக்கமும் என்பதையெல்லாம் அறிந்து கொண்ட பிறகு அவர் மனம் மேலும் உருகியது.

"இனிமேல் உங்கப்பா உன்னோடு இல் லைன்னு நீ சொன்னால் அது எனக்குச் செய்யும் துரோகம். புரியுதா?" என்று பின் னாளில் ராம்ஷேகர் சொல்ல, சிவப்ரியாவின் மனம் பாசநன்றியில் ததும்பியது.

"ஆனால் ஒண்ணு. உங்களை நான் அப்பான்னெல்லாம் கூப்பிடணும்னு எதிர் பார்க்காதீங்க. நீங்க கண்டிப்பான ஆசிரி யராகத்தான் எனக்குக் காட்சி தரணும். அப்போதுதான் நானும் உங்களைவிடச் சிறப்பான டாக்டராக உருவாக முடியும்."

'உங்களைப் போல' என்பதற்கு பதில் 'உங்களைவிட' என்ற பதத்தை அவள் பயன்படுத்தியதை அவர் பெரிதும் ரசித்தார்.

"டாக்டர், ஜாயின் அஸ் ஃபார் லன்ஞ்ச்" என்று அழைப்பு வந்தது ராம் ஷேகருக்கு.

'ரெண்டு நிமிடத்திலே வரேன்'. கையிலிருந்த லாப்-டாப்பை இயக்கினார்.



## வயித்தெரிச்சல் சிரிப்பு!

**"ஏங்க நேரங் காலமில்லாமல் ஊரைச் சுத்தற நம்ம பையன், ரிஸ்ட்வாட்ச் கேட்டு உங்களை நச்சரிக்கிறானே, எதுக்கு?"**

**"நேரங் காலத்தோட ஊரைச் சுத்தறதுக்காகத்தான் இருக்கும்! வேற எதுக்கு?"**

**— உ. ராஜாஜி**

இணையத்தளத்துக்குள் நுழைந்தார். அன்று மதியம், தாம் பேச வேண்டிய தலைப்பில் ஏதாவது மிகச் சமீபத்திய முன்னேற்றம் இருக் கிறதா? தேடினார். திருப்திகரமான தகவல் கிடைத்தது. அப்படியே தனக்கு ஏதாவது ஈமெயில் வந்திருக்கிறதா என்று பார்த்தார். வியப்பு. ஆனந்திடமிருந்து. ஏதாவது அவசர மென்றால் தன்னைத் தொலைபேசியில் தொடர்பு கொள்வதுதானே அவன் வழக்கம். மெயில் பாக்ஸைத் திறந்தார்.

'வணக்கத்துக்குரிய டாக்டருக்கு, உங்களை ஆலோசிக்காமலேயே நான் என் வாழ்க்கை சம்பந்தப்பட்ட ஒரு முக்கியமான முடிவை எடுத்துவிட்டேன். அது உங்களை பாதிக்கக் கூடும், மன்னிக்கவும். சென்னை திரும்பியதும் என் முடிவை மாற்றிக் கொள்ளச் சொல்லி தயவு செய்து வற்புறுத்த வேண்டாம். இனி சிவப்ரியாவுக்கு என் வாழ்வில் இடம் இல்லை. அன்புள்ள, ஆனந்த்'

திகைத்துப் போனவரை நோக்கி கருத் தரங்கத்தின் அமைப்பாளர் வந்தார். "உங் களுக்குச் செய்தி தெரியுமா? டைரக்டர் மணி சங்கர் ஒருமணி நேரத்துக்கு முன்னே இறந்துட்டாராம். மாரடைப்பு!"

வெளிப்படையாக இயக்குனரின் மறைவுக்கு துக்கப்படுவதாக நடிக்க வேண்டிய கட்டாயம். ஆனால் வேணுவின் மனத்தில் உவகை பொங்கியது. 'பாக்கியிருக்கும் படத்தை நீங்கதான் இயக்கித் தரணும் வேணு' என்று தயாரிப்பாளர் கூறிவிட்டாரே.

(தொடரும்)



*ஹலோ ஃப்ரண்ட்ஸ்... என்ன, கொஞ்சம் காலமாக ஆளையே காணவில்லை என்று உருகி மருகியிருப்பீர்களே...? எதை எடுத்தாலும் சின்ன 'ப்ரேக்' கொடுப்பது இப்போது ஃபாஷனாகி விட்டதே!... உங்கள் அதிர்ஷ்டம்... கொஞ்சம் பெரிய 'ப்ரேக்'காகி விட்டது. இருந்தாலும் மும்பையின் மசாலாக்களைப் படைக்காமல் எனக்கும், சுவைக்காமல் உங்களுக்கும் ரொம்ப காலம் இருக்க முடியாது என்ற விதியை யாரால் மாற்ற முடியும்?*

*இதோ... சுடச்சுட இந்த வார ஸ்பெஷல்கள்!*

அரசியலில் ஆரம்பிப்போமா? காங்கிரஸ்காரரான சரத்பவாருக்கும், எதிரிகளான பி.ஜே.பிக்கும் ஒரே இழை சலாம்; தொல்லை தந்து கொண்டிருக்கும் 'என்ரான்' விஷயத்தை இவர் ஆலோசனைக்கு விட்டு விட்டார்களாமே...? அப்புறம் மும்பையின் ஸ்டாலின் உத்தவ் தாக்கரேவும், சேனைக்காரர்களின் பரம வைரியான சகன் புஜ்பலும் ஒரே மேடையில், ஓர் இலக்கியப் பொதுக்கூட்டத்தில் சந்தித்துக் கொள்ளப் போகிறார்களாம். ஹூம்... அரசியலில் தான் 'கட்டி'யும் 'பட்டி'யும் நிரந்தரமில்லையே! 'பெட்டி' தானே நிரந்தரம்?

நிரந்தரம் என்றதும் நினைவுக்கு வருவது எவர்க்ரீன் ஸ்டார் அமிதாப்தானே? கேள்வியின் நாயகனான அமிதாப்பின் 'குரோர்பதி' நிகழ்ச்சி கொஞ்சம். 'ஜொய்...ய்...ங்' ஆகும்போதெல்லாம், புதுசாக, ஸ்டார் ஸ்பெஷல், குழந்தைகள் ஸ்பெஷல் என்று எதையாவது அறிமுகப்படுத்துவது வழக்கமாகிவிட்டது. முதல் 'குரோர்பதி' ஹர்ஷவர்த்தனுக்குப் பிறகு, இப்போதுதான் முதல் குரோர்பதி-பத்னி (ராகுல் & மிஸஸ்) உருவாகியிருக்கிறார்கள். நிகழ்ச்சியில் தொய்வோ இல்லையோ, தொய்ந்து போயிருந்த ABCL நிறுவனத்தை, கேள்வி கேட்டே கடனையடைத்துத் தூக்கி நிறுத்தியிருக்கிறார் அமிதாப்! அந்த விடா முயற்சியையும் உழைப்பையும் என்ன சொல்ல? 'கேள்வி பிறந்தது அன்று... நல்ல பதில் கிடைத்தது இன்று'... என்றா?

பதிலுக்குப் பதில் என்றதும் நினைவுக்கு வருவது அண்டர்வர்ல்ட்! இந்த வார

## மும்பை மசாலா:

# உனக்காகவே வாழ்கிறேன்!





ரேஷனில் என்ன போடுகிறார்கள் என்ற ரீதியில், இந்த வாரக் கொலையில் யார் மண்டையைப் போடுகிறார்கள் என்று செய்தியாகி விட்டபடியால், ஹோட்டல்காரர் ஷெட்டியைச் சுடச்சுடச் சுட்டது பெரிய விஷயமல்ல; ஆனால்... ஒரு மாறுதலுக்கு, சுற்றி நின்ற கூட்டம் வேடிக்கைப் பார்க்காமல், கொலையாளிகளில் ஒருவரைப் பிடித்து, அடித்தே கொல்ல யத்தனித்ததே... அதுதான் மாபெரும் திருப்பு முனை! மும்பைக்காரர்கள் விழித்தெழுந்தால் அண்டர் வர்ல்ட் படுத்து விடாதோ?

படுத்துவிட்ட பரபரப்புகளில் ஒன்று, நம்ம நக்மா–சௌரவ் – டோனா கிசுகிசு; 'நடக்காதென்று தெரியும்; துணிந்துதான் இறங்கினேன்; துண்டிக்கப்பட்டு துயருற்றிருக்கிறேன்; என் குருவே வழிகாட்டிக் கொண்டிருக்கிறார்' என்று காதலி நக்மா நொண்டியடிக்க, 'தாம் தீம்' என்று ஜதியாட்டம் போடுகிறார் மனைவி டோனா. சௌரவ் மௌனச் சாமியாராக இருக்க, டோனா, "எந்தத் திருமணமும் 100% பர்ஃபெக்ட் இல்லை! ஒன்று, எப்படியோ போகட்டும் என்று விட்டு விட வேண்டும்; அல்லது போராடத் தெரிந்திருக்க வேண்டும்' என்கிறார். (ஒடிஸி) ஆடத் தெரிந்தவருக்குப் போராடவா தெரியாது?

ஆனால் ஆட்டத்தை மிஞ்சிவிட்டது பாட்(டு)டம் தான்! 'உனக்காகவே நான் வாழ்கிறேன்' ( Everything I do... I do it for you) என்று ஒவ்வொரு இள மனசையும் தொட்ட ப்ரையன் ஆடம்ஸ், மும்பையிலுள்ள கோரேகானின் திறந்த வெளி அரங்கில் மூன்று மணி நேரம் இசை மழை பொழிந்தார்.

நடுத்தர வர்க்கத்தை ஏமாற்றாமல், டிக்கெட் விலை ரூ 500, ரூ 300 என்று வைத்திருந்ததால், கலெக்ஷன் விஷயத்தில் மைக்கேல் ஜாக்ஸன் நிகழ்ச்சியைப் போல் 'ஃப்ளாப் ஷோ' ஆகவில்லை! அதுவும் கூட்டத்திலிருந்து தன்னுடன் இணைந்து பாட சிம்ரன் என்ற பெண்ணை அழைத்ததும், அவருடன் டூயட் பாடி அனுப்பியதும் கண் கொள்ளாக் காட்சி... ப்ரையனும் ஒயிட் & ஒயிட்டில் ட்ரிம்மாக இருந்தார்... ஆமாம்... செவிக்கு விருந்தில்லாதபோது (ஸவுண்ட் ஸிஸ்டம் படு தண்டம்) கொஞ்சம் கண்ணுக்கும் ஈயப்படும் தானே? வெயிலின் கசகச, நெரிசல், தண்ணீரில்லாமை, செக்யூரிட்டி இல்லாமை, எல்லாவற்றையும் மீறி... நம் கலாசாரத்தில் பிறந்த கானடாவைத் தெரியாதென்றாலும் (ஐ டோண்ட் நோ கர்நாடிக் ம்யூசிக்) இந்தக் கனடாக் காரரை தெரிந்து கொள்வதற்கு போதிய கூட்டத்தைப் பார்த்தால்... ஒரே 'ப்ரையன் வேவ்'தான் போங்கள்!

ஹாங்... கடைசிச் செய்தி என்றாலும் முக்கியச் செய்தி: ஃபர்தீன்கானைத் தெரியுமா? நடிகர் ஃபெரோஸ்கானின் பிள்ளை... ஹீரோவாக உருவாகிக் கொண்டிருந்தவர்... லேட்டஸ்ட் 'ஹிட்'டைக் கொண்டாடிவிட்டு வந்தவர் நார்கோடிக்ஸ் பீரோவின் ஹிட்லிஸ்டில் இடம் பெற்றுவிட்ட துரதிர்ஷ்ட செய்தியை... அடுத்த வாரம் பார்ப்போமே... இன் டீடெயல்...

— ஜெயஸ்ரீ ராஜ்



போன லட்சம் லட்சமான பணம் - கொள்ளையடிச்ச பணம்தான் - உல்லாச வாழ்க்கைல கரைஞ்சு போயாச்சு. இப்போ ஐயா ஓட்டையாண்டி! பார்த்தார்; இங்கிலாந்து ஜர்னலிஸ்ட் ஒருத்தருக்கு தகவல் அனுப்ப ஏற்பாடு செஞ்சார். அந்த ஜர்னலிஸ்ட் தன்னோட பத்திரிகை ஆபீஸ்ல ('தி சன்') பேசி ஒரு பெரிய தொகை ரெடி பண்ணிட்டார். அதை சன் மானமா ஏத்துக்கிட்டு சரண்டர் ஆகற கைதி இப்போ தமது டைரியை அந்தப் பத்திரிகைக்கு எழுதுவார். இவருக்குப் பணம், அவங்களுக்கு சர்குலேஷன். அஃப்கோர்ஸ், அவர் எழுதறதை 'புக்' ஃபார்ம்ல கொண்டு வர பப்ளிஷர்ஸ் ஏற்கெனவே கியூவுல நிற்கறாங்க...

லாலு பேர்ல ஜாமீனில்லாத கைது வாரண்ட் பிறப்பிச்சிருக்கு சி.பி.ஐ.ன்னு பேப்பர்ல படிச்சிருப்பீங்க...

உடனே 'நோ பாலிடிக்ஸ் சுமி!'ன்னு நீங்க அலறுறது கேட்குது. ப்ளீஸ் வெயிட்! திஸ் இஸ் நாட் பாலிடிக்ஸ்..!

லாலு சரணடையப் போறதா அறிவிச்சிருக்கார். (தட் டெஃபனட்லி இஸ் பாலிடிக்ஸ்). பட், இன்னொரு ஆசாமி - லண்டனைச் சேர்ந்த ஒரு வான்டட் கிரிமினல் ரோனி பிக்ஸ் - 35 வருஷத்துக்கப்புறம் சரண்டர் ஆகியிருக்கார்ன்றது தெரியுமா...?

மனுஷன் லண்டன் ரயில்ல திட்டமிட்ட பெரிய கொள்ளை நடத்தினவர். முப்பது வருஷம் கடுங்காவல் தண்டனை. சிறையில அடைச்சுட்டாங்க. அங்கேயிருந்து தப்பிச்சு ஆஸ்திரேலியா போய், அப்புறம் பிரேஸிலுக்கு ஓடி கல்யாணம் பண்ணிக்காமலே அப்பாவாகவும் ஆயிட்டார். அந்த நாட்டுப் போலீஸுக்கு இவருடைய சரித்திரம் தெரிய வந்தப்போ இட் வாஸ் டூ லேட். அப்பாவாயிட்டதாலே அவரைக் கைது பண்ணித் திருப்பியனுப்ப சட்டம் இடங் கொடுக்கலை!

இப்போ ஏன் சரண்டர் ஆகியிருக்காருன்றதுதான் ரொம்ப ரொம்ப இன்ட்ரஸ்டிங். கையில கொண்டு

பப்ளிஷர்னதும் ஒரு துக்கமான நியூஸ் நினைவுக்கு வருது. வானதி பதிப்பகம் சோமு (வானதி திருநாவுக்கரசோட மகன்) காலமாயிட்டார்ன்ற ஷாக்கிங் நியூஸ். சின்ன வயசுதான். ரைட்டர்ஸ் சர்க்கிள் எல்லாருக்கும் அவரை நல்லாத் தெரியும். மத்த பப்ளிஷர்ஸோட புக் ரிலீஸுக்கெல்லாம் கூட வருவார். தி எக்ஸ்டென்டட் ஃபாமிலி வில் மிஸ் ஹிம்!

மரணம் - அதுவும் எதிர்பாராம திடீர்னு ஏற்படறப்போ பாதிக்கிற மாதிரி மனுஷனை வேற எதாவது பாதிக்குமான்றது சந்தேகம்தான்:

ரொம்ப வயசான பிறகு மனைவியை இழந்திருக்கற முன்னாள் ரஷ்ய அதிபர் கோர்பசேவ் நியூஸ்வீக் இன்டர்வியூல



## ஒரு ஆத்தியாசமா

என்ன சொல்லியிருக்கார் தெரியுமா...?

"நாளாக ஆக என் துக்கம் குறையும்னு நினைச்சேன். ஆனா இதுவரைக்கும் குறையலை. நண்பர்களும் என் மகளும், நான் என் வாழ்க்கையை இனி எனக்காக வாழணும்னு சொல்றாங்க. ஒத்துக்கறேன். எனக்கு வாழ்க்கையில பற்று இருக்கு. நிறைய பயணம் செய்யறேன். நிறைய மனிதர்கள் கிட்டே பேசிப் பழகறேன். ஆனா எங்க போனாலும் நான் தனியா இருக்கறப்போ பழைய ஞாபகங்கள் திரும்பி வருது..."

'க்ரீன் கிராஸ் இன்டர்நேஷனல்'ன்னு சுற்றுச்சூழல் இயக்கம் ஆரம்பிச்சிருக்கற கார்பசேவ், அது விஷயமா அமெரிக்கா

போனபோது கொடுத்த பேட்டி இது. அவர் அதிபரா இருந்த டைம்ல, சோவியத் யூனியன்ல 1300 ஃபாக்ட்ரிகளை மூடச் செய்திருக்கார் - அவற்றால் பொல்யூஷன் மிக அதிகமாயிருக் கறது தெரிஞ்சு...

கம்யூனிஸத்தைக் கைவிட்டதனால சில குழப்பங்கள் ஏற்பட்டிருந்தாலும் ரஷ்யா தளர்ந்துடக்கூடாதுன்றது கோர்பசேவ் அட்வைஸ். புதின் சர்வாதிகாரப் போக்குக்கு இடங்கொடுத்துடவே கூடாதுன்னு 'வார்ன்' பண்ணியிருக்கார்.

'பீபிள் கெட் தி கவர்ன்மென்ட் தே டிசர்வ்!' ரஷ்யாவுக்கும் இது பொருந்தும்; தமிழ்நாட்டுக்கும்தான்.

எனக்கு நானே ஒரு எக்ஸிட் போல் நடத்திக்கிட்டேன் சமீபத்துல... ஒரு டிஃபரண்டான எக்ஸிட் போல்! மூணு வெவ் வேற அட்மாஸ்ஃபியர்ல மூணு வெவ்வேற ஆர்டிஸ்ட்களோட கச்சேரி! ஆர்டிஸ்ட் யாருன்னு நான் மென்ஷன் பண்ணப் போறதில்லே. இதுல ஆடியன்ஸோட ரியாக்ஷன்தான் முக்கியம்.



முதல் நிகழ்ச்சி ஒரு பாப்புலரான சென்னை சபால நடந்தது. நிகழ்ச்சி ஆரம்பிக்கறதுக்கு முன்னாடியே ஒரு சீஃப் கெஸ்ட் வானத்தை வில்லா வளைக்கறாப்போல பேசி, ஆர்டிஸ் டைப் புகழ்ந்து தள்ளி, பணம் விரும்பாத அவர் குணத்தைப் போற்றிப் பராவி பொறுமையை சோதிச்சுவிட்டு ஒரு வழியா ஃபர்ஸ்ட் ரோல உட்கார்ந்தார். சரியா த்ரீ அண்ட் எ ஹாஃப் மினிட்ஸ்...



வர்ணம் பாடி முடிச்சதும் ஆர்டிஸ்டைப் பார்த்துப் பெரிய கும்பிடாப் போட்டுட்டு எழுந்து போயிட்டார் சீஃப் கெஸ்ட்! அஃப் கோர்ஸ் ஆர்டிஸ்ட் அதைக் கொஞ்சம்கூட பொருட் படுத்தாம பாடி முடிச்சார்.

இன்னொரு புரோக்ராம் . முதல்ல ஒரு முக்கியமான மீட்டிங். அப்புறம் மியூசிக். மீட்டிங்கை விட மியூசிக்கைக் கேட்க வந்த கூட்டம் அதிகம். பேச்சாளர்கள் டைம் எக்ஸீட் பண்ணினதைப் பொறுக்காம கை தட்ட ஆரம்பிச்சுட்டாங்க ஆர்டிஸ்டோட ஃபான்ஸ். ஒரு கர்நாடிக் மியூசிஷியன் இப்படிப் பாபுலராயிருக்கறது நல்ல விஷயம்தான்னாலும் அந்த ஆடியன்ஸோட வெறி... இட் இஸ் நாட் இன் கீப்பிங் வித் த ஸ்பிரிட் ஆஃப் தி ஆர்ட்.

தர்ட் கான்ஸர்ட்... டென்ட்டு கொட்டாய் ஸ்டான்டர்டுக்கு மைக் வைச்சு ஒரு கோவில் கச்சேரி! ரோட்ல பஸ் ஓடுறது நெஞ்சுல வந்து அலையுது - டால்பி சரவுன்ட் எஃபக்ட் மாதிரி... அத்தனை டிஸ்டர்பன்ஸ் இருந்தும் அங்க வந்திருந்த ஸ்மால் பட் இன்வால்வ்ட் ஆடியன்ஸ் அதைப் பொருட் படுத்தணுமே...! ஊஹூம். தலையாட்டி ரசிக்கறதும்; ரிக்வெஸ்ட் கேட்கறதும்; குழந்தைங்க தப்பு தப்பா தாளம்போட்டு என்ஜாய் பண்ணிட்டு எட்டு மணிக்கு அம்மாக்கள் மேல சாய்ஞ்சு தூங்றதும்...

# எக்ஸிட் போல்!

எனக்கு நானே நடத்திக்கிட்ட 'எக்ஸிட் போல்' ரிசல்ட் இதுதான்.

முதல் நிகழ்ச்சியைவிட்டு வெளில வர்றப்போ நல்ல சங் கீதத்தையும் மீறி மோசமான போலித்தனம் பற்றிய மனக் கசப்பு ரொம்ப டிஸ்டர்பிங்கா இருந்தது.

செகண்ட் : இப்படியொரு டிமான்டிங் அட்மாஸ் ஃபியர்ல நாம இருக்கணு மான்னு உறுத்தல்.

தர்ட் : இவ்வளவு டிஸ்டர் பன்ஸ் நடுவுலயும் என் ஜாய்மெண்ட்; பீஸ் அஃப் மைன்ட்.

இதனால் அறியப்படுவது யாதெனில் ஆடியன்ஸ் - அவங்களோட அழகான பங்கேற்பு - ஒரு நிகழ்ச்சிக்கு வெரி இம்பார்ட்ன்ட்.

— சுமி

சித்திரைவெயில் உக்கிரமாக பூமியைத் தகர்த்துக் கொண்டிருக்க- நந்தகோபன் வெயிலின் கொடூரத்தை விட மிக அதிகமாக மனதுக்குள் புழுங்கிக் கொண்டு உள்ளே நுழைந்தார்.

'சே! என்ன வெயில்...!' என்றபடியே மின் விசிறியைப் போட நினைத்தவர் அது ஏற்கெனவே போட்டபடி இருந்தது கண்டு 'பவர் கட்டா... போச்சு..!' என்றபடி நாற்காலியில் அமர்ந்து துண்டை எடுத்துக் கையால் சுழற்றி காற்றை வரவழைத்து 'உஸ்ஸ் அப்பாடா' என்று ஆசுவாசப்படுத்திக் கொண்டார்.

உள்ளிருந்து பானு வெளியே வந்தாள். "என்னங்க, சாப்பிடறீங்களா?"

"எனக்கு ஒண்ணும் வேண்டாம். அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்" என்றவர் அவள் முகத்தைப் பார்க்க-

"உங்களைத் தேடி அச்சாபீஸ் ஓனர் ரங்கசாமி வந்துட்டுப் போனார். வந்தா, இதை உங்க கிட்ட தரச் சொன்னார்" என்றவள் கடிதத்தை நீட்டினாள்.

நந்தகோபன் கடிதத்தை வாங்கிப் பார்த்தார். வழக்கமானது என்றாலும் கொஞ்சம் கூடுதலாக காரம் சேர்த்து விளாசியிருந்தார்.

*அன்புள்ள நந்தகோபனுக்கு...*

*இதுவரை என்னை அலைய வைத்தது போதும். இனி உங்கள் பின்னால் அலைய முடியாது. தங்கள் புத்தகம் அச்சடித்த பில் பாக்கி மூவாயிரத்தை உடனடியாகத் தரவும். இல்லாத பட்சத்தில் தங்கள் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்க வேண்டியது வரும். பின்னால் என் மீது வருத்தப்படாதீர்கள்*

- என்று கடிதத்திலேயே கடித்துக் குதறியிருந்தார்.

நந்தகோபனுக்கு பெருத்த அவமானமாகப் பட்டது. சின்னதாக ஆசைப்பட்டு பெரிய தவறைச் செய்து விட்டோமோ என்று தோன்றியது.

கடந்த மூன்று மாதங்களுக்கு முன்பு அவர் ஒரு நூல் எழுதி வெளியிட்டார். நூலின் தலைப்பு, 'வாலில்லாத நாய்கள்.' மிகவும் யதார்த்தமயமான சிறுகதைத் தொகுப்பு அது.

நந்தகோபன் அப்படியொன்றும் பிரபலமான எழுத்தாளரில்லை. அடிக்கடி பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதி அனுப்புவது வழக்கம்.

வழக்கம்போல தபால் தலை வைத்த கதைகள் வரிசை எண், தேதி குறிப்பிடப்பட்டு, பின் 'தேர்வு பெறவில்லை' என்ற துண்டு குறிப்புடன் திரும்பி வரும். அப்படி வராத கதைகளும் நிறைய உண்டு.

'குறிஞ்சி பூத்த மாதிரி, அத்தி பூத்த மாதிரி' என்றெல்லாம் சொல்வார்களே அதுபோல அங்கும் இங்கும் சில சிற்றிதழ்களிலும், நாளிதழ்களிலுமாக மொத்தம் பன்னிரண்டு கதைகள் பிரசுரமாகியிருந்தன. அவற்றையெல்லாம் ஒரே தொகுப்பாக வெளியிட்டால் என்ன



எஸ். மீனலோசினி

என்ற எண்ணம் உதித்தது.

அவரது இலக்கிய வட்டார நண்பர்கள கூட அவருக்குத் தூபமிட்டனர்.

"நந்து... இப்படியே கதைகளைப் பத்திரிகைகளில் போட்டால் உன் பேர் பிரபலமாகாது... புத்தகமா போட்டு ஸ்டால்களிலேயும், ஹிக்கின்பாதம்ஸ்லேயும் முன் வரிசையிலே வைக்கணும். அப்பதான் அடுத்தடுத்து பதிப்பகத்துக்காரங்களும், நாவல் வெளியிடறவங்களும் உன்னை அடையாளம் கண்டுக்குவாங்க" என்றபோது மனத்தில் ஆசை ஆலமரமாய்க் கிளை விட்டது.

பல பதிப்பகங்களுக்குக் கடிதங்கள் எழுதினார். பலனில்லை. சிலர் வருத்தத்துடன் நூல்கள் விற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கும் நிலையை விளக்கி நழுவிக் கொண்டனர். ஏமாற்றம்! ஏமாற்றம்!

தாமே சொந்தமாக நூல் வெளியிட்டால் என்ன? என்று யோசித்தார்.

கையில் இருந்த இருப்பு... மனைவியின் நகைகள் என்று அடகு வைத்ததில் எட்டாயிரம் வரை தேறியது.

நகரில் இருந்த பிரஸ்காரன் ரங்கசாமியிடம் நூல் அச்சடிக்கக் கொடுத்தார்.

இருபது நாளில் நூற்றி இருபது பக்கங்களில் மணிகண்டனின் அழகான ஓவியத்தில் லேமினேஷன் அட்டையுடன் புத்தகம் தயாரானது.

முதன் முறையாக தனது சிறுகதை தொகுப்பைக் கையில் எடுத்து விரித்துப் பார்த்தபோது, சுஜாதா, தி. ஜா., ஜெயகாந்தன், பிரபஞ்சன், சா. கந்தசாமி வரிசையில் தானும் இடம் பிடித்து விட்டதைப் போன்ற பிரமையும் உள் மகிழ்வும் பொங்கிற்று.

நல்ல நாளைத் தேர்வு செய்து நூல் வெளியிடுவதற்கு ஆயத்தமானார்.

ஒரு கல்யாண மண்டபம் வாடகைக்குப் பிடித்து, நோட்டீஸ் அச்சடித்து... வால் போஸ்டர்கள், தட்டி போர்டுகள் என விமரிசையாக நூலை வெளியிட முடிவு செய்தார்.

எல்லா செலவுகளையும் கூட்டிப் போட்டுப் பார்த்தார். வெளியீட்டு விழாச் செலவே எட்டாயிரத்தைத் தொட்டது.

அச்சக உரிமையாளருக்குப் பாதி தொகையைக் கொடுத்தார். புத்தகம் விற்று பணம் வரும்; மீதியை அடைத்து விடலாம் என்று கணக்குப் போட்டார்.

நூல் வெளியீட்டு விழாவில் பல உள்ளூர், வெளியூர் இலக்கிய நண்பர்கள் கலந்து கொண்டனர். அவரைப் பாராட்டியும், தொகுப்பில் உள்ள கதைகளைப் பாராட்டியும் (குறைகளைச் சொல்லாமல்) வாழ்த்தி மேலும் பல நூல்கள் வெளியிட வேண்டுமென பாராட்டு மழை பொழிந்தனர்.

நந்தகோபன் வானத்தின் உச்சியில்



# திடீர்ப் பரிசுப் போட்டி — 7

**வா**ரந்தோறும் வாசகர்களின் கேள்விகளுக்கு அலுக்காமல் பதில் சொல்லிக் கொண்டிருக்கும் தராசு — ஒரு மாறுதலுக்காக வாசகர்களிடம் ஒரே ஒரு கேள்வி கேட்டிருக்கிறார். சிறந்த பதிலுக்கு ரூ. 100/- பரிசு தரவும் பலத்த சிபாரிசு செய்திருக்கிறார். சுவையான 'நறுக், சுருக்' பதிலை அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி, திடீர்ப் பரிசுப் போட்டி 7 என்று முகவரியில் குறிப்பிட்டு 28.5.2001க்குள் அனுப்புங்கள்.

தராசு தொடுத்த கேள்வி இதோ:

**? திடீரென்று சோ, ஜெயலலிதாவின் ஆதரவாளராக மாறியது ஏன்?**

சஞ்சாரம் செய்து கொண்டிருந்தார்.

அரங்க வாயிலில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த அவரது நூல்களில் இருபது மட்டுமே விற்பனையாகி இருந்தன.

அந்தப் பணம் கூட தேநீர், பிஸ்கட் செலவுக்கே போதவில்லை. ஓட்டமும் நடையுமாக வந்து மனைவியின் சிபாரிசில் அக்கம்பக்கம் கடனை வாங்கி அன்றைய பாக்கியை செட்டில் பண்ணினார்.

இதுவெல்லாம் மூன்று மாதங்களுக்கு முந்தைய நிகழ்வுகள்.

இப்போது—

அச்சகத்தாரிடமிருந்து, பணம் கேட்டுக் கடிதம்! மனைவி தன் நகைகளை மீட்டுத் தரக்கேட்டு உள்வேலை நிறுத்தம் — அடிக்கடி.

புத்தகங்களை ஸ்டால்களுக்கு அனுப்பியதிலும், வெளியூர் சென்று வசூல் பார்க்க என்று அலைந்த அலைச்சலிலும் செலவினங்கள் எக்ஸ்ட்ரா.

'நண்டு கொழுத்தால் வலையில் தங்காது' என்ற பழமொழி இப்போது ஞாபகத்திற்கு வந்தது.

'சும்மா கிடந்த சங்கை எடுத்து ஊதி இப்போது மாட்டிக் கொண்டோமே?' மனக் கவலை உண்டாயிற்று.

கவலை தோய்ந்த இதயத்தோடு அப்படியே அமர்ந்திருந்தார்.

**வா**சலில் 'போஸ்ட்' என்ற தபால்காரர் குரல் கேட்டது.

தபால்காரர் எடுத்துக் கொடுத்த இருபத்தைந்து காசு தபால் அட்டையில் அவரது 'வாலில்லாத நாய்கள்' சிறுகதை தொகுப்பை யாரோ ஒரு வாசகர் படித்துப் பாராட்டியிருந்தார்.

நந்தகோபனுக்குள் மின்னல்களாய் சந்தோஷச் சிற்றுகள் இறங்கின. ரத்தத்தில் புது உற்சாகம் தெறித்தது. மறுபடி... மறுபடி... கடிதத்தைப் படித்தார். பாராட்டு...பாராட்டு...பாராட்டு...!

இதுவரை மனத்தை அரித்துக் கொண்டிருந்த அத்தனை கவலைகளும் விநாடியில் மாயமாய் ஓடி மறைந்து கொண்டதை நன்றாகவே அவரால் உணர முடிந்தது. ○

# அல்லாவுக்கு நன்றி!

ஒரு முறை அடிப்பட்ட புலி சும்மா விடுமா? இதோ திரும்பவும் ரெடியாகி இருக்கிறது. "ரஹ்மா னோடு மீண்டும் மோத ஆசையாக இருக்கிறேன்" என்றிருக்கிறார் பாக்ஸர் லெனாக்ஸ் லூவிஸ்.

பட்ட காயத்தையெல்லாம் ஆற்றிவிட்டு இப்படி லூவிஸ் அறிக்கை விட்டாலும், எந்தவித கஷ்டமுமின்றி அசாத்தியமாக லூவிஸை வீழ்த்திய அமெரிக்காவின் ஹாசிம் ரஹ்மானைப் பற்றித்தான் பாக்ஸிங் வீரர்கள் இப்போதும் பேசிக் கொண் டிருக்கிறார்கள்.



• ரஹ்மான்

உலக சாம்பியன்களை எதிர்கொள்ளவே பாக்ஸர்களுக்கு தில் வேண்டும். அதிலும் இதுவரை அதிகம் கேள்விப்பட்டிராத ரஹ்மான், ஐந்தாவது ரவுண்டிலேயே லூவிஸை நாக்-அவுட் பண்ணியது சும்மாவா? உலக பாக்ஸிங் வரலாற்றில் இது ஆச்சர்யத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

உலக சாம்பியன்களை இம்மாதிரி தடாலடியாக வீழ்த்தியது பாக்ஸிங் வரலாற்றிலேயே இரண்டு முறைதான். 1990ல் டக்ளஸை, டைசன் வீழ்த்தியதும், 96ல் டைசனை ஹோலி பீல்டு('காதைக் கடித்த'கதை ஞாபகமிருக்கா?) வீழ்த்தியதும்தான். இந்தப் போட்டிகளி லெல்லாம் 42வது, 25வது ரவுண்டுகளில்தான் இவர்கள் வீழ்த்தப்பட்டனர். ஆனால் ரஹ்மான் வீழ்த்தியது ஐந்தாவது ரவுண்டிலேயே என்பதுதான் சாதனை.

ஒரு ரவுண்டில் ரஹ்மான் அடித்த அடியில் லூவிஸின் கண்களிலிருந்து பொத்துக் கொண்டு வந்து விட்டது ரத்தம் என்றால் பாருங்கள்!

முன்னாள் பாக்ஸர் முகமது அலி, 1974ல் போர்மேனை தென் ஆப்ரிக்காவில் வென்றதன் நினைவாக இந்தப் போட்டியை இங்கு நடத்த ஏற்பாடு செய்ததே லூவிஸ்தானாம்! ஆனால் வந்ததிலிருந்தே பார்வையாளர்களின் சப்போர்ட் இவருக்குக் கிடைக்கவில்லை. ரஹ்மான், முதல் பஞ்சை விட்டபோதிலிருந்து கூட்டம் முழுவதும் 'தலைவா, கலக்கு தலைவா' என்பது மாதிரி ரஹ்மானுக்கு ஆதரவாய் ஆக்ரோஷமாய்க் கூச்சலிட ஆரம்பித்து விட்டார்கள்.

போட்டி ஆரம்பிக்கும் முன்பே, 'நான்தான் வெல்வேன்' என்று லூவிஸ் கத்திக் கொண்டிருந்தாலும் ரஹ்மானின் ஒவ்வொரு பஞ்சும் வெறித்தனமாக இயங்கியதால் அம்போவானார் லூவிஸ்.

அமெரிக்காவைச் சேர்ந்த 28 வயதான இந்த ஹாசிம் ரஹ்மான், "நான் அல்லாவுக்கு நன்றி சொல்கிறேன். லூவிஸ் திறமையான சாம்பியன். அவரை வென்றது மகிழ்ச்சிதான்" என்கிறார் அடக்கமாக, தமது கட்டுமஸ்தான உடலைக் குலுக்கி!

— செ. ஏக்நாத்

# சிரிப்பாய்ச் சிரிக்குது!

''எதுக்கு நம்ம தலைவரை மட்டும் எல்லாக் கட்சிக் காரங்களும் 'ராங் நம்பர்'னு கூப்புடுறாங்க?''

''எல்லா தேர்தல்லயும் ஜெயிக்காத கூட்டணியில நம் கட்சியை இணைச்சுடறாரே?''

- டி.ஏ.சி. பிரகாஷ்

''சே! அரசியல்வாதிங்க தவறான முறையில் கோடி கோடியா பணம் சம்பாதிக்கிறாங்க. நாட்டுப்பற்றே இல்லாமப் போச்சே...!''

''அதனாலென்ன, அதுக்குப் பதிலாதான் நோட்டுப் பற்று அதிகமாயிடுச்சே!''

- சம்பத் குமாரி

''கட்சி அலுவலகத்தை நிறைய ஜன்னல் வச்சு தலைவர் கட்டச் சொல்றாரே... ஏன்?''

''கம்பி எண்ணிப் பழகிட்டாராம்!''

- தஞ்சை தாமு

''தலைவர், ரொம்ப கோபமா இருக்காரே... என்ன காரணமாம்?''

'''பொது மக்களே! நாங்கள் ஆட்சிக்கு வந்தால், தனியார் மயம் ஆன பொதுத் துறை நிறுவனங்களை மீட்டு, மீண்டும் எங்கள் தலைவர் மயம் ஆக்குவோம்'னு யாரோ ஒரு தொண்டர் பேசிட்டாராம்!''

- மடுக்கரை. யு. அரசு தேன்மொழி

# ஜோக்ஸ் ஜோ:ஃப்!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

வீட்டின் அழகு கதவில் தெரியும்!

Now Flat Buyers insist on

# MAYURAM

## TIMBER DOORS



because

DOOR is not a product of mere Carpentry. Kiln Seasoning and Pressure Treatment of Timber is a pre-requisite

Contact:

**MAYURAM TIMBER & GENERAL TRADING CORPN.**

H.O.: 83, G.S.T.Road, Chennai - 45. ☎:236 8297/238 1281.

Showroom: 13, Rameswaram Road, T.Nagar, Chennai - 600 017. ☎: 434 5207

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka